# நீங்கள் இன்று உங்கள் பற்களை
# மக்ளீன் செய்தீர்களா?




மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை மூன்று விதமாக வேலை செய்கிறது-பற்களை வெளுப்பாக்கி, ஈறுகளைப் பலப்படுத்தி, சுவாசத்தை இனிதாக்குகிறது — இவை எல்லாம் ஒரே சமயத்தில் தான். அதனால்தான் லக்ஷக்கணக்கான பேர்கள் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையையே தேர்ந்தெடுக்கிறார்கள். மக்ளீன்ஸ் தினமும் இரு தடவை உபயோகியுங்கள்.

இப்போது பெரிய அளவிலும், சிக்கனமான மாபெரும் அளவிலும் கிடைக்கிறது.




**பற்களை அதிக வெண்மை யாக்குகிறது**

வர்த்தக விவரங்களுக்கு :-

ஜே. எல். மாரிஸன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிட்.,
தபால் பெட்டி 6527, பம்பாய் 26. தபால் பெட்டி 387, கல்கத்தா
தபால் பெட்டி 1370, மதராஸ்.

MTY. 16, TAM.



பருவங்களுடனும் பகல் - இரவின் குறிப்பிட்ட நாழிகைகளுடனும் இசைந்து வருவது இந்திய ராகங்களின் தனிச் சிறப்பு. ஒவ்வொரு ராகமும் அந்தந்த வேளையின் ரஸம் அல்லது பாவத்தை வெளியிடும் சாதனமாகும்.

தினசரி இரவிலும் பகலிலும் அந்தந்த நாழிகைக்கு ஏற்ப ராகங்கள் உருவகப்படுத்தப்படுகின்றன. அகாலத்தில் பாடும் ராகங்களுக்கு ஜீவன் போய்விடுமாம்.

# பைரவி

காலை வேளைக்குரிய பைரவிராகத்தின் உருவகப்படத்தை மேலே காணலாம். இது கணவனை சிவனைச் சேருவதற்கு ஏங்கி, சோர்வடைந்த பார்வதியினுடையது. சேர்க்கை நிச்சயமென்று தெரியுமாதலால் மிக அடக்கமும் சாந்தமுமான மனோபாவத்தைக் காண்பிக்கிறது.

 

# காவேரி



நந்தன மலர் 12 || தை இதழ் 6

## பொருள் அடக்கம்



குறிப்பு:

'காவேரி'யில் வெளியாகும் கட்டுரைகளிலுள்ள பெயர்கள் கற்பனைப் பெயர்கள். அவைகளில் அடங்கிய அபிப்பிராயங்களும் அவற்றை எழுதியவர்களுடையனவே. அவைகளுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளியல்ல

# ARMSTRONG
## THE BETTER BICYCLE

# ஆம்ஸ்டிராங்
## *சிறந்த பைஸைகிள்*



சிறந்த பைஸைகிளாகிய **ஆம்ஸ்டிராங்** ஒன்று உங்களிடம் இருந்தால் போதும்; வேலை நிமித்தமாகவோ வேடிக்கையாகவோ எவ்வித தொந்தரவும் இன்றி நீங்கள் ராஜபாட்டைபோலச் சவாரி செய்யலாம். ஒரு **ஆம்ஸ்டிராங்** வாங்குங்கள். ஸைகிள் தொழிலில் பிரசித்திபெற்ற தயாரிப்பாளர்களின் சிறந்த தயாரிப்பு உங்களுக்குச் சொந்தமாயிருக்கிறது என்கிற பெருமை உங்களுக்கு விரைவில் ஏற்படும். அதன் பெயரே குறிப்பிடுவதுபோல், வலிவாகவும், இந்தியாவின் கரடுமுரடான ரஸ்தாக்களில் நீடித்து நின்று வருஷக்கணக்கில் நம்பிக்கையளிக்கத் தக்கவாறு உழைப்பதாகவும் அது விளங்குகிறது. **ஆம்ஸ்டிராங்** — மிகவும் பிரபலமான பைஸைகிள்—ரஸ்தாவில் அதை நம்புங்கள். அதற்குக் கொடுக்கும் விலை அதற்குத்தகும்.

விநியோகஸ்தர்கள்:

**ராயல் ஸைகிள் அண்டு மோட்டார் கம்பெனி**

**13/14, பிராட்வே, தபால் பெட்டி நெ. 219, சென்னை-1.**



# காவேரி

நந்தன ஹு மலர் 12

“சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்”—பாரதியார்

தை இதழ் 6


புதிய தொடர் கதை

# நீரோட்டம்

**தி. சேஷாத்திரி**

## 1 நல்ல உபாத்தியாயர்

சந்திரசேகர முதலியார் இரவுச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு மாடி அறைக்குச் சென்றார். போகும்போதே எட்டாவது படியில் நின்று வலது பக்கம் உள்ள அறையைக் கவனித்தார். அங்கே ரெங்கநாதன் முதலியாரின் முதல் பையனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான். ஏதோ ஒன்றிரண்டு வார்த்தைகள் பணக்காரனைப்பற்றிக் காதில் விழவே முதலியார் அங்கேயே கைப்பிடியைப் பிடித்துக்கொண்டு சிறிது நேரம் நின்றார்.

ரெங்கநாதன் ஆங்கிலப் பாடம் நடத்திக்கொண்டிருந்தான். S. S. L. C. பாட புத்தகத்தில் விவிலியத்திலிருந்து ஒரு கதை வந்திருந்தது. அது பணக்காரனையும் ஏழையையும் பற்றிய கதை. பணக்காரன் நரகம் போக, அவன் உண்ட மிகுதியைத் தின்ற பிச்சைக்காரன் சுவர்க்கம் போனதாகச் சொல்லுகிறது அந்தக் கதை. முதலியார் பையன் அதை முடித்தவுடன் ஸார்! என்று கூப்பிட்டான்; தயங்கினான்.

சும்மா சொல் என்றான் ரெங்கநாதன்.

“இந்தக் கதையினால்........”

நல்ல பழக்கத்தில் வந்த பையன்; ஏதாவது அவசரமாகச் சொன்னால் மதிப்புக்குரிய உபாத்தியாயரை அவமதித்ததாக ஆகிவிடுமோ என்று பயப்படுகிறான். அதனால் ரெங்கநாதன் அவனை உத்ஸாகப்படுத்தி “பணக்காரர்களுக்கு எல்லாம் நரகமா? என்று கேட்கிறாய், இல்லையா?’ என்றான்.

“ஆம்” என்றான் பையன் தயங்கிக் கொண்டே.

ரெங்கநாதன் ஒரு நிமிஷ நேரம் யோசித்தான்; பையனுக்கு எவ்வளவு தூரம் சொல்லலாம் என்று அவன் மனது சிந்தித்தது.

முதலியாரும் கவனித்தார்.

“கொஞ்சம் கவனி!” என்றான் ரெங்கநாதன்.

“கதைக்கு அந்தக் கருத்தே இல்லை. ஏழையை மறக்கும் பணக்காரன் சுவர்க்கம் போக முடியாது என்பதுதான் பொருள்”

பையன் மனம் தெளிவுபெறவில்லை.

“கேள்! என்று அழைத்தான் ரெங்கநாதன்

“இந்த ஏழை என்று ஏன் ஸார் இருக்க வேண்டும்?”

“ஆம், ஏழை பணக்காரர் என்று இல்லாத சமூகம் இருக்கமுடியாதா? என்றும் இந்தக் கேள்வியைத் திருப்பிக் கேட்க

லாம். அது முடியாது என்றுதான் தோன்றுகிறது. ஒரு தேசமே பணக்காரத் தேசமாக ஆனல்கூட மற்றொரு தேசம் தன்னிடம் உள்ள மூலப் பொருள்களின் குறைவு காரணமாக ஏழையாயிருந்தால் என்னசெய்ய முடியும்? ஒரு தேசம் எல்லாவிதத்திலும் செல்வம் பொருந்தி வாழ முடியுமா? ஆகவே தேசம் தேசத்தை எதிர்பார்த்துத்தானே நிற்கிறது. அதேபோல் இந்த ஏழை பணக்காரன் என்ற வித்யாசமே போகாது: பணத்தை ஆதாரமாக வைத்து ஏற்படும் மாறுபாடு போய்விட்டாலும் வசதியைக்கொண்டு மாறுபாடு ஏற்பட்டால் என்ன செய்கிறது.? உதாரணமாக உழவன் வயலுக்குப் போக மோட்டார் வேண்டியதில்லை. மந்திரி காரியாலயத்திற்குப் போகக் கார் வைத்துக்கொண்டால் தப்பிதமில்லை, இந்த மாறுபாட்டை நாம் பெரிதுசெய்யவும் கூடாது. ஆகவே மாறுபாட்டை ஏற்றுக்கொண்ட பிறகு இந்தக் கதையில் வரும் கருத்தைத் தெரிந்துகொள்வதில் சிரமம் இருக்காது. தேவையில்லாத பொருளுக்கு உடையவனுக இருக்கும்போது தேவைப்பட்டவனைத் தவிக்க வைத்து, அந்தப் பொருளை வீணுக்குபவன் பிசகு செய்கிருன் என்று கண்டிக்கத்தான் இந்தக் கதை எழுதப்பட்டிருக்கிறது.

பையன் கவனித்தான்.

"உனக்கு முற்றிலும் புரியாது போனலும் இதைமட்டிலும் தெரிந்துகொள். மனிதர்கள் புத்தியாலும் சக்தியாலும் மாறுபட்டிருக்கும் வரை ஏற்றத் தாழ்வு இருக்கத்தான் இருக்கும். காரணம் கூற முடியாத இடத்தில் அதிர்ஷ்டத்தைப்பற்றிப் பேசுவதும் இயற்கைதான்; ஆனல் வலிவுடையவன் தன் பெருமையையோ, அதிர்ஷ்டத்தையோ காரணம் காட்டி மற்றவர்களைத் தாழ்ந்த நிலையில் விட்டு வைத்திருக்கக் கூடாது."

"பின் என்ன ஸார் செய்கிறது?"

"கூடிய வரையில் அவசியமான உதவி செய்ய வேண்டும்!"

"ஏழைக்குப் பிச்சை கொடுத்தால் போதுமா ஸார்!"

"பிச்சை நம்நாட்டில் தனி ஒரு நிலையால் ஏற்பட்டது. தன் உடலின் தேவையைக் கூடப் பூர்த்திசெய்ய நேரமில்லாமல் அல்லும் பகலும் ஒரு சிறந்த பணியில் ஈடுபட்டிருந்தனர் சிலர். அவரைக் காக்கச் சமுகம் ஏற்றுக்கொண்ட பொறுப்பு பிச்சை என்பது. பிச்சையைப் பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்து, அதை நிலைநாட்டினர் பெரியோர். ஆனல் காரணத்தையே மறந்து, அதற்குரிய காரியத்தையும் மறந்து பிச்சை வாங்க அலைந்தனர் சிலர். அதற்காகப் பிச்சை எடுப்பது இகழ்ச்சி என்றனர். எடுப்பது இகழ்ச்சி, கொடுப்பது கடமை. ஆகவே அதற்கு உரித்தானவர்கள் தவிர, மற்றவர்கள் எடுக்கக்கூடாது. போடுகிறவர்கள் எப்படி அறிவார்கள். ஆதலால் ஏமாற்றுகிறவனுக்குச் சுலபமாய் விட்டது........"

"அப்படியானல் பிச்சைபோடக் கூடாதா ஸார்?"

"பசித்து வந்தவனுக்குப் பிச்சை போடாதுபோனல் என்ன செய்வான்? அத்துடன் நிற்கக் கூடாது. அவன் அந்தத் தொழிலை நிறுத்த ஏற்பாடு செய்ய வேண்டும்?"

"ஒரு மனிதனல் முடியுமா?"

"அதனல்தான் பேசாமல் பிச்சை போட்டுக்கொண்டே இருக்கிறோம். சோம்பேறிகள் வளர்ந்துகொண்டே இருக்கிறார்கள்"

"வழிதான் என்ன?"

"சர்க்கார் செய்யலாம். அத்துடன் கூட உங்களைப்போன்ற நிலையிலுள்ளவர்களும் ஒரு ஏழைக்கு வழி செய்து கொடுக்கலாம்"

***"பிச்சை எடுத்தவன் பழக்கம் விடுமா?"***

***"விடாது. அதற்காகச் சிறு பையன் யாராவது பிச்சை வாங்கினல் நிரந்தரமாக ஏதாவது உபகாரம் செய்யலாம்......"***

***மணி ஒன்பது அடிக்கிற சப்தம் கேட்டது. ரெங்கநாதன் "சரி நேரம் ஆகிவிட்டது. இன்று நேரம் வீண் என்று எண்ணுதே; நல்ல ஒரு விஷயத்தைப்பற்றி யோசித்தோம். தவிர, ஆங்கிலத்திலேயே பேசியதால் உன் ஆங்கில ஞானமும்***

பெருக உதவியாயிருக்கும். நாளை இதைப்பற்றி ஒரு கட்டுரை ஆங்கிலத்தில் எழுதிவை!'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான்.

'குட்நைட்' என்றான் சிஷ்யன் சுந்தரேசன்.

"நமஸ்காரம்" என்று சொல்லிவிட்டு ரெங்கநாதன் வாயிற்பக்க வாசல்படி வழியாக வெளியேறினான். முதலியாரும் மேலேறித் தம் அறைக்குச் சென்றார். அவர் படிக்கட்டில் கடைசிப் படி தாண்டி வாயிற்படி நுழைவதற்கும் அவர் மனைவி ருக்குமிணி அண்ணி முதல்படி ஏறுவதற்கும் சரியாக இருந்தது.

சுந்தரேசன் ஸ்கிரீனைத் தள்ளிவிட்டுக்கொண்டு வெளியேறினான். 'அண்ணி!'

"வா அப்பா சுந்தரம். ஐயா போய்விட்டாங்களா? சரி, நீ உள்ளே போய் பாலை வாங்கிச் சாப்பிடு. படுத்துக்கொள்" என்று சொல்லிக்கொண்டே அண்ணி இரண்டு படிக்கட்டு ஏறினார்கள்.

''அக்கா எங்கே அம்மா!"

"அதோ அந்த அறையிலே இருக்குது. போ!" என்று சொல்லிவிட்டு அண்ணி மேலே சென்றார்கள். பின்னால் சமையற்காரன் குழந்தையைத் தூக்கிக்கொண்டு வந்தான்.

குழந்தையைக் கட்டிலில் விட்டுவிட்டு, சமையற்காரன் திரும்பியதும் அண்ணி சேலை எடுத்து முதலியார் கையில் கொடுத்தபடியே, ரொம்ப நேரம் முன்னமேயே கிளம்பினீர்கள்? ஏன் இவ்வளவு நேரம்? என்று கேட்டார்கள்,

''உபாத்தியாயர் சுந்தரேசனுக்குச் சொல்லிக்கொடுத்ததைக் கேட்டுக் கொண்டிருந்தேன்.''

''யார் ரெங்கநாத ஐயரையா? ரொம்ப நல்ல பிள்ளை. சுந்தரேசனுக்கு அவரிடம் மட்டற்ற மரியாதை. அவர் சொல்லியதற்கு மாறுபாடு கிடையாது என்கிறான்.''

''நிசமா ரொம்ப கெட்டிக்காரர் தான்.''

''கெட்டிக்காரர் கிடக்கட்டும் நடத்தை? நம்முடைய சந்திராவை ஏறிட்டுக் கூடப் பார்த்ததில்லை. என்னிடம் பேசும் போது என் தம்பி பேசுகிறாப் போலிருக்கிறது கனிவு; ஆனால் பையன் உங்களிடம் பேசுகிறாப் போலிருக்கிறது மரியாதை. தகப்பனார் மாதிரியே தீர புத்தி...''

''எதாவது சில சமயம் சாப்பிடக் கொடுக்கிறது தானே...... பால், பழம்...... நம் வீட்டில் தயார் செய்ததைத் தான் சாப்பிடமாட்டாரே!''

"அது யார் சொன்னார்கள்? அண்ணி, அன்பு, சுசி ருசி இவ்வளவு இருந்தால் எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம் என்று சொல்லிவிட்டார். ஆனாலும் அவர் இங்கே ஒன்றும் சாப்பிடுவது இல்லை."

''ஏன்?''

''அவருடைய அம்மா காத்துக்கொண்டிருப்பார்களாம். முன்னேற்பாடாகவே சொல்லிவிட்டு வந்தால் சாப்பிடுவார்.''

''சரி தான். ஒரு நாள் இங்கேயே சாப்பிடச் சொல்ல வேண்டும். நம்முடைய பையன் அதிர்ஷ்டசாலி தான். நல்ல பாடம் மட்டும் அல்லாமல் நடத்தையும் நல்லதாக ஆகிவிடும்.''

''அவர் குணத்தைப் பார்த்து, சந்திரா ஸம்ஸ்கிருதம் படிக்க வேண்டும் என்கிறாளே; அவரையே சொல்லிக் கொடுக்கச் சொன்னால் என்ன? என்று கூட யோசிக்கிறேன்.''

''சொல்லலாம். நானே ஏற்பாடு செய்கிறேன்''

## 2

## பணமும் உபயோகமும்

சந்திராவுக்கு வயது பதினேழு. S. S. L. C. சென்ற வருஷம் பாஸ் செய்த பிறகு அவர் தாயார் பிடிவாதத்தின் பேரில் படிப்பை நிறுத்தி விட்டாள். பெண்ணும் தாய்க்கடங்கின பெண். பள்ளிக்கூடத்திற்குச் சென்று ஷேக்ஸ்பியரும் மில்டனும் வாசித்தால்தானா? பெண்கள் கற்றுக் கொள்ள வீட்டில் வேலையும் சாஸ்திரமும் இல்லையா? என்று சொல்லி வீட்டிலேயே தங்கிவிட்டாள். அவளுக்கு ஸம்ஸ்கிருதம் படிக்கவேண்டும் என்று ஆசை. அவளாக ஏதோ கற்றுக் கொள்ள முயற்சி செய்தாள். ஆனால் யாராவது சொல்லிக்கொடுத்தால்தான் நல்லது என்று முடிவு செய்தபொழுதுதான் தந்தையும் ரெங்கநாதனைச் சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்யலாம் என்று எண்ணினார். தந்தை இன்னம் பெண்ணிடம் சொல்லவில்லை.

சந்திரா அறையில் உட்கார்ந்துகொண்டு தம்பி நோட்டை எடுத்து வாசித்துக்கொண்டிருந்தாள். ஆங்கில நோட்டில் அவன் "பணக்காரரும் ஏழையும்" என்ற வியாசம் எழுதியிருந்தான்.

''ஏய் சுந்தரேசா? இதெல்லாம் என்னடா?'' என்று கூப்பிட்டாள் அக்கா.

சுந்தரேசன்: 'எதை அக்கா கேட்கிறாய்?'

'இந்த வியாசம் நீயாகவா எழுதினாய்?'

'இல்லை' உபாத்தியாயர் எழுதச் சொன்னார்?'

"யார், எந்த உபாத்தியாயர்?''

''ட்யூஷன் உபாத்தியாயர்தான்''

"அவர் சொன்ன விஷயங்களா? நீயாக எழுதினாயா"

"அவர் சொன்ன விஷயங்கள்தான் நானாகவும் ஒன்றிரண்டு சேர்த்துக்கொண்டேன்''

"எது உன் அபிப்பிராயம்?"

"கடைசியில் எழுதியிருக்கிறேன், பார். பணக்காரர்கள் பணத்தைச்சும்மா பாங்கில்போடுவதை விட ஏதாவது சிறிய தொழில் ஆரம்பித்து யாராவது பத்துப்பேருக்கு வேலே தேடித் தருவது நல்லது. தங்கள் பையனுடன் ஓர் இரண்டு ஏழைப் பையன்களேயும் வாசிக்க வைக்கலாம்...... என்பதெல்லாம் என் கருத்துக்கள்."

"நல்ல கருத்துக்கள். நாமும் நம் அப்பாவிடம் சொல்லி, ஒரு பையனே வாசிக்கச் சொன்னுல் என்ன?"

"அது தான் சரி. பையன் யாராவது இருந்தால் சொல்" என்று சொல்லிக்கொண்டே முதலியார் உள்ளே வந்தார்.

சந்திரா எழுந்திருந்தாள். சுந்தரேசனும் எழுந்தான். முதலியார் சென்று நாற்காலியில் அமர்ந்தார். குழந்தைகள் இருவரும் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் முகம், உடலின் ஒவ்வொரு அங்கத்திலும் ம ரி யா தை பெருக்கெடுத்துப் பாய்ந்து கொண்டிருந்தது.

"நம்முடைய குடும்பத்திலே ஒரு ஏழைப் பையனேப் பொறுக்கி வளர்க்கலாம்" என்ருன் சுந்தரேசன்.

"அதில் என்ன விசேஷம்? அது நம்முடைய கடமை தானே. வேறு யாராவது ஒரு ஏழைப் பையனுக்கு உதவி செய்ய வேண்டும்."

"அப்பா, அக்கா, பிறர் வீட்டுப் பையனுக்கு உதவி செய்தால் நம்மிடம் அக்கரைகாட்டமாட்டான்"

"அதனுல் என்ன? நாம் உதவி செய்வது உதவிக்காகவா, அல்லது பிரதியுபகாரம் கிடைக்கும் என்ற ஆசைக்காகவா?"

முதலியார் குறுக்கிட்டார். "நீங்கள் இரண்டு பேர் சொல்லுகிறபடியும் செய்து விடுகிறேன். நமக்குச் சொந்தக்காரப் பையன் ஒருவனேயும் படிக்க வைப்போம்; வேறு ஒரு பையனுக்குச் சம்பளம் கொடுத்துச் சாப்பாடும் போடுவோம். இன்னும் பள்ளிக்கூடத்தில் நன்ருய்ப் படிக்கிற பையன்களுள் சம்பளம் கட்ட வழி இல்லாமல் இருக்கும் சிலருக்கும் உபகாரம் செய்வோம். சரி தானே" என்ருர் முதலியார். அவர் முகத்தில் வெளியே ஒரு தீர்மானம் செய்துவிட்டால் சாதாரணமாகத் தோன்றும் பெருமையே தோன்றவில்லே. குழந்தைக்கு அன்ருடம் கட்டிக் கொள்ளத் துணி வாங்கும் தந்தை முகத்தில் எப்படி ஒரு பாவமும் மாருதோ அப்படியே இருந்தது.

'ஆமாம் அப்பா, அப்படியே செய்யுங்கள். பள்ளிக்கூடத்தில் அப்படிப் பையன்கள் இருந்தால் விசாரித்துச் சொல்லும்படி ரெங்கநாத ஸாரிடமே சொல்லலாம்.' என்ருள் சந்திரா.

சந்திரா ரெங்கநாத ஸார் என்ற வார்த்தையை உச்சரிக்கும் விதத்தில் உள்ள பரிவை முதலியார் கவனித்தார். சிறிது நேரம் பெண்ணேப் பார்த்தார்.

"அதற்குள் என்ன காலேயில் எல்லோரும் இங்கே கூட்டம் போட்டீர்கள்?" என்று கேட்டுக் கொண்டே அண்ணியும் வந்தார்கள். வந்தவர்கள் அங்கே மாட்டியிருந்த சரஸ்வதி படத்தையும் லக்ஷ்மி படத்தையும் நோக்கிக் கை கூப்பிவிட்டு, பிறகு கணவன் பக்கம் மரியாதையுடன் பார்த்து அருகில் நின்று கொண்டார். அவர் இடுப்பில் இரண்டு வயது ஆண் குழந்தை ஒன்று தந்த விக்ரஹம் போல் சிரித்த வண்ணம் இருந்தது.

முதலியார் கையை நீட்டிக் குழந்தையை வாங்கினுர். கூடவேஓடிவந்த மீனுவைச் சந்திரா இழுத்துத் தன் அருகில் நிறுத்திக்கொண்டே அம்மாவிடம் அங்கே நடந்துகொண்டிருந்த விஷயத்தைச் சொன்னுள்.

"அப்படியானுல், முதலியார் பையன்களாகப் பார்த்து உபகாரம் செய்யுங்கள்!" என்ருர்கள் அண்ணி.

"இது நம் உபாத்தியாயருக்குப் பிடிக்காது!" என்ருள் சந்திரா.

தன்னுடைய உபாத்தியாயரிடம், ஒருநாள்கூட வாசிக்காத சந்திரா இவ்வளவு பரிவு காட்டுவது சகிக்கவில்லே. பொருமையின் உருத் தெரியாத ஒரு புகை மண்டலம் உள்ளத்தைப் புதைத்தது. அதனுல் அவன் "ரெங்கநாத ஸாருக்கா? அவருக்கு இதில் என்ன வந்திருக்கிறது? அப்பா பணம் கொடுக்கிருர். அவர் இஷ்டத்தில் அவர் தலேயிட ஏது அதிகாரம்?"

'அவர் தலேயிடவும் மாட்டார்!' என்ருள் சந்திரா. முதலியாரும் அண்ணியும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

முதலியார் சண்டை வளராமலிருக்க "சுந்தரேசா, என்ன நீ கூட இப்படிப் பேசுகிருய்?" என்ருர். சுந்தரேசன் தலேயைக் குனிந்துகொண்டான். அவனுக்கு என்ன குருபக்தி குறைவா?"

"அம்மா. இனிமேல் ஜாதியைப்பற்றி அதிகம் பேசக்கூடாது அம்மா. யாருக்குத் தகுதியோ அவருக்குத்தான் உபகாரம் செய்யவேண்டும்." என்ருள்.

அண்ணி சற்றுநேரம் சும்மா இருந்தார். அவர் மனதில் பல சந்தேகங்கள் எழுந்தன. ஜாதியை மறப்பது என்பது எப்படி முடியும்? வேறு ஜாதி மக்களிடம் பேசுவதில் வித்தியாசம் பாராட்டவேண்டாம். ஆனுல் எல்லா விஷயங்களுமே அப்படியா? உதாரணமாக நாம் அவர்கள் வீட்டில் சாப்பிடமுடியுமா? நம் பெண்ணே வேறு ஜாதிக்காரர்களிடம் கொடுக்கமுடியுமா? அப்படிச் செய்தால் மட்டும் எல்லோரும் ஒன்ருகி விடமுடியுமா? மனமாறுபாடும் வழக்க மாறுபாடுகளும் இருந்துதானே வரும்? இருக்கும் மாறுபாடுகளே அழித்து மீண்டும் வேறு மாறுபாடுகளே ஏற்படுத்துவதால் என்ன லாபம்? தவிர, பெரியவர்கள் சொல்லிக்கொடுத்து உடம்பில் ரத்தத்துடன் கலந்த எண்ணங்களே எப்படி மாற்றுவது?

அண்ணி பேசவில்லை.

சந்திரா சொன்னாள்: அப்பா, ரெங்கநாத ஸாரிடம் சொல்லிவிடுங்கள். வருஷத்திற்கு எவ்வளவு ரூபாய்வரை செலவழிக்கமுடியும் என்பதைப்பற்றிச் சொல்லி, அவரையே ஒரு தீர்மானம் செய்துதரச் சொல்லலாம்.

'அதுதான் சரி!' என்றான் சுந்தரேசன்.

அண்ணி நாம் எல்லோருமே இருந்து கேட்கலாம்!' என்றார். அண்ணிக்கு இந்த ஜாதி விஷயமாக இன்னும் தெரிந்துகொள்ளவேண்டும் என்ற எண்ணம் இருந்தது.

முதலியாருக்கும் அதில் சம்மதமே. கதராடையே அணிந்து சதா சிரித்தமுகத்துடன் உயர்ந்த விஷயங்களையேபற்றிப் பேசிச் சிந்திக்கும் ரெங்கநாதனிடம் அவருக்கு அன்பு உண்டு. அவன் எண்ணங்களுக்கு மதிப்பு உண்டு. தவிர, அவன் அவருக்கு ஆப்த நண்பராயும் வீட்டுப் புரோகிதராயும் இருந்த பரமேசுவர ச்ரௌதிகளின் மகன். பரமேசுவர ச்ரௌதிகளின் மந்திரோச்சாடனங்களாலும் அவருடைய ஆசீர்வாதத்தாலுமே தாம் இந்த நிலைக்கு வந்ததாக முதலியார் மனப்பூர்வமாக எண்ணினார். எவ்வளவோ சந்தர்ப்பங்களில் முதலியார் அவருக்கு ஆயிரக்கணக்கான ரூபாய்கள் தந்திருப்பார். அவர் அதை வேண்டியதில்லை என மறுத்துவிட்டார். "முதலியார்வாள்! எங்களுக்குப் பணம் வேண்டாம். எல்லோருக்கும் உழைக்க அனுமதியிருந்தால் போதும். தெய்வபலத்தின் துணைகொண்டு உலகமே வாழ, நாங்கள் நம்பும் தொண்டு முறைக்கு உதவி அளித்துவாருங்கள். உங்கள் வீடு பெருகப் பெருக நாங்கள் சுபிக்ஷமாக இருப்போம். அது போதும்" என்று சொல்லிவிடுவார். ரெங்கநாதன் பி. ஏ. வாசித்தானே தவிர ஸம்ஸ்கிருதத்தில் அவன் நல்ல தேர்ச்சியும் பெற்றிருந்தான். குடுமியை எடுக்கவேண்டிய அவசியம் அவனுக்குத் தோன்றியதில்லை, அதற்காகக் கட்டுப்பெட்டியாகவும் இருந்ததில்லை. மாணவ நண்பர்களிடம் எவ்வளவோமுறை பரிகாசத்துக்கு இலக்காகியும்கூட அவன் நித்யக்கடனை முடிக்கத் தவறுவதில்லை. "அட, இந்தச் சந்தியாவந்தனம் என் சொந்த நன்மைக்காகச் செய்யவில்லை அப்பா. உலகம் வாழ இது அவசியம் என்று சாஸ்திரம் சொல்லுகிறது; நானும் நம்புகிறேன். பிறருக்குச் சௌகரியம் என்று தோன்றும் ஒன்றை நான் ஏன் நிறுத்தவேண்டும்? அதனால் பிறருக்கு ஏதாவது தொந்தரவோ தீமையோ ஏற்பட்டாலும் நிறுத்தலாம். நான் கொஞ்சம் நீரை வாரி இறைப்பதால் யாருக்கு நஷ்டம்? மூக்கைப் பிடித்துக்கொண்டு அமர்வதால் உங்கள் மூச்சா நின்று விடும்? தவிர என் கடமையில் உலகின் நன்மையையும் பிணைத்து இருக்கும்போது ஏன் நிறுத்துவேன்?" என்பான். அவர்கள் சும்மா சென்றுவிடுவார்கள். பிறர் நன்மையில் நம்பி வேலை செய்பவனை ஒருவரும் ஒன்றும் செய்யமுடியாது ஆகவே ரெங்கநாதன் பெருந்தன்மையையும், நல்ல குணங்களையும் புத்தித் திறமையையும், சேவை மனப்பான்மையையும், சிந்தனை தியானம் செய்யும் வழக்கத்தையும் அறிந்து பழகியிருந்த முதலியார்அவர்கள் அவனிடம் தம் குடும்ப நடவடிக்கைகளைச் சொல்லக்கூடத் தயங்கியதில்லை. அவர் கதர் கட்ட ஆரம்பித்தது அவனால் தான். நிலத்தைப் பண்ணையாட்களிடமே சாகுபடிக்குக் கொடுத்தது அவனால் தான். மில் ஒன்று வாங்க ஏற்பாடு செய்து கொண்டிருந்ததும் அவனால் தான். வீட்டிலே எலெக்ட்ரிக் விசிறி வைக்கக்கூட அவன் அபிப்ராயத்தை அறிவார். ஆடம்பரத்துக்கும் அவசியத்துக்கும் எல்லைக் கோடு இடுவது கடினம். நடக்கும் ஏழை கார் ஆடம்பரம் என்கிறான். ஆனால் காரில் போயும் வேலைக்கு நேரப் போகாமல் உடல் நோகும் ஆளைக் கேட்டால் அவன் என்ன சொல்வான்?

ஆகவே நடுவு நிலைமையில் நின்று கற்பனை, புத்தி, அறிவு, உதார குணம் இவைகளை நன்றாய் உபயோகப்படுத்தி யோசிப்பவன் தான் உண்மை உணர முடியும். ரெங்கநாதன் அந்தப் பரீக்ஷையில் நன்கு தேறியவன் என்று முதலியார் அறிந்திருந்தார். அவர் இன்று நிலையில் ரெங்கநாதன் அவசியம் என்றால் அவசியம்; அனாவசியம் என்றால் அனாவசியம் என்று நம்பும் நிலைக்கு வந்திருந்தார்.

ஆகவே அவர் குழந்தைகளுடையவும் மனைவியுடையவும் தீர்மானத்துக்குக் கை தூக்கியதில் ஆச்சரியமில்லை.

"சரி, சந்திரா. அப்படியே உனக்கும் சம்ஸ்கிருதம் கற்றுக் கொடுக்கும் விஷயத்தையும் பற்றி ஏற்பாடு செய்துவிடலாம்."

"சரி, இந்த அக்டோபர் இரண்டாம் தேதியிலிருந்தே ஆரம்பிக்கலாம்."

"ஊம்...... என்றார் அண்ணி.

என்ன? என்று கேட்டார் முதலியார். வெள்ளம் வருமுன் அணை கோலும் முயற்சி அண்ணி அவர்களுடைய குரலில் தலை எடுப்பதை அவர் கவனித்தார்.

'ஒன்றுமில்லை!' என்றார் அண்ணி.

முதலியார் ஊஹித்துவிட்டார். சந்திராவும் புரிந்துகொண்டாள். அவள் பேசவில்லை.

முதலியார் சொன்னார்: நீயே அன்று சொன்னாய்; இன்று பயப்படுகிறாயே!

"நீ பயப்படவேண்டாம். இரண்டுபேருமே பொறுப்புத் தெரிந்தவர்கள். முட்டாள் தனமாக அவர்கள் செய்யமாட்டார்கள்" என்றார்.

சமையற்காரன் காலை ஆகார மணியை அடித்தான்.

கூட்டம் கலைந்தது.

(தொடரும்)



# தேசீய பௌதிக ஆராய்ச்சி நிலையம்

கே. ஸ்ரீ.

டில்லிக்கு விஜயம் செய்யும் ஊர்பேர் தெரியாத யாத்திரீகரும்சரி, மிகவும் தெரிந்த பிரமுகராயினும் சரி இப்பொழுதெல்லாம் குதுப்மினாரைப் பார்ப்பதுபோல் தேசீய ரசாயன ஆராய்ச்சிச் சாலைக்கு விஜயம் செய்வது பழக்கமாகி விட்டது. காரணம் இந்த ஆராய்ச்சிச் சாலை (National Physical Laboratory) மேனாட்டு விஞ்ஞான நிலையங்களுக்கு எந்த விதத்திலும் குறையாததுதான்.

டில்லியில் பூஸா என்பது மிகவும் பிரஸித்திபெற்ற இடம். இங்கேதான் அகில இந்தியாவிலும் புகழ்பெற்ற விவசாய ஆராய்ச்சிக் கழகம் இருக்கிறது. பல நூறு ஏக்கர்கள் விஸ்தீர்ணம் உள்ள இந்த இடத்தில்தான் இந்த நிலையம் கட்டப்பட்டிருக்கிறது. ஆங்கிலத்தில் "எல்" என்ற அக்ஷர ரூபத்தில் கட்டப்பட்டிருக்கும் இந்தக் கட்டிடம் ஒரு பக்கம் 600 அடி நீளமும், இன்னொரு பக்கம் 150 அடி நீளமும் உள்ளது. கீழச் சாரியில் இரு மாடிகளும், மேலச் சாரியில் மூன்று மாடிகளும் உள்ள இந்தக் கட்டிடத்திற்கு 80 லக்ஷம் ரூபாய்க்கு மேல் செலவாயிற்று.

இந்த விஞ்ஞான நிலையம் எப்படி உருவாயிற்று என்பது மிகவும் ருசிகரமான விஷயம். இந்தியா அடிமைப்பட்டு இருந்தபொழுதே டாக்டர் சாந்தி ஸ்வரூப் பட்நுகர் இதைப்பற்றிக் கனுக் கண்டார். 1941ஆம் வருஷம் விஞ்ஞானத் தொழில் ஆராய்ச்சி நிலையத்திற்கு டைரக்டராக இருந்த இவர் இந்திய சர்க்கார் வர்த்தக மெம்பருக்கு ஒரு மகஜர் சமர்ப்பித்தார். அதில் அவர் இந்தியாவில் ஒரு மத்திய ஆராய்ச்சிச்சாலை ஏற்படுத்துவது அவசியம் என்று வற்புறுத்தினர். 1943ஆம் வருஷம் இது விஷயம் பரிசீலனை செய்து ஒரு அறிக்கை தயார்செய்ய ஸர் குலாம் மகம்மது அவர்களைத் தலைவராகக்கொண்ட ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. 1945ஆம் வருஷம்



**ஆராய்ச்சி நிலையத்தில் உள்ள ஹிலியோ ஸ்டேட் எனும் கருவியின் திறனைப்பற்றி டாக்டர் எம். எல். -காய் விவரித்துக் கூறுகிறார்.**

அந்தக் கமிட்டி தன் அறிக்கையைத் தயார்செய்து அதைச் சர்க்காருக்குச் சமர்ப்பித்தது. 1946ஆம் வருஷம் அந்த அறிக்கையை விஞ்ஞானத் தொழில் ஆராய்ச்சி நிலையத்தின் நிர்வாகக் கமிட்டி அங்கீகரித்தது.

இந்தச் சமயம் தேசமும் விடுதலை அடையும் நிலை வந்துவிட்டதால் காரியங்கள் துரிதமாக நடக்க ஆரம்பித்தன. 1947ஆம் வருஷம் ஜனவரி-மீ நாலாம் தேதி பண்டித ஜவாஹர்லால் நேரு நிலையத்திற்கு அஸ்திவாரக் கல் நாட்டினார். அவ்வமயம் ஸர் சார்ல் ஸ்டாக்வின், ஸர் ஹெரால்ட் ஜோன்ஸ் முதலிய அந்நிய நாட்டு விஞ்ஞானிகள் உள்படப் பலர் பிரசன்னமாயிருந்தார்கள். சரியாக மூன்று வருஷங்களில் விஞ்ஞான நிலையம் கட்டப்பட்டு, சர்தார் படேல் அதைத் திறந்துவைத்தார்.

அச்சமயம் ஒரு பெரிய விழாவே நடந்தது. விழாவுக்குத் தலைமை வகித்த கவர்னர் ஜனரல் ராஜாஜி சொன்னார்: "அடிப்படை ஆராய்ச்சிக்குச் செலவிடப்படும் பணம் விரயம் ஆவதில்லை. உண்மையில் முன்னேற்றமடைந்துள்ள நாடுகள் விஞ்ஞானத்துக்குப் பணத்தை லக்ஷியம் செய்யாமல் செலவிடுகிறார்கள்"

விஞ்ஞான நிலையம் கட்டிவிட்டால் போதுமா, அதை நடத்தத் தகுதியுள்ள டைரக்டர் வேண்டாமா. அதற்கு மிகவும் சிரமப்பட்டு, டாக்டர் ஸி. வி. ராமனின் கீழ்பயின்று விஞ்ஞானமேதை என்று பெயர்பெற்ற டாக்டர் கே. எஸ். கிருஷ்ணனைப் பிடித்தார்கள். தனிப்பட்ட நபர்களைப் பண்டிதநேரு புகழ்ந்து கேள்விப்பட்டிருக்கிறீர்களா? "டாக்டர் கிருஷ்ணனைவிட, சங்கோஜியும் அடக்கம் உள்ளவருமான மற்றொருவரைக் கண்டுபிடிப்பது கஷ்டம். ஆனால் இந்த அடக்கமான வெளி வேஷத்தைக் களைந்தால் நாம் காண்பது என்ன? விஞ்ஞானத்தைக் கரைகண்ட மேதையைக் காண்கிறோம்" என்றார் பண்டிதநேரு கட்டிடத் திறப்பு விழாவைப் பற்றிப் பேசும்பொழுது.

ஆராய்ச்சி நிலையம் அடிப்படை ஆராய்ச்சி, தொழில் அளவு ஆராய்ச்சி, அதாவது ரகத்தைப் பரிசோதித்தல், உழைப்பை அறிதல், இயற்கை உருவத்தில் காணப்படும் வஸ்துக்கள், ஆராய்ச்சி பூர்வமாக அறிந்த உண்மைகளை உப

யோகத்துக்குக் கொண்டு வருதல் முதலிய வேலைகளில் ஈடுபட்டிருக்கிறது.

ஆராய்ச்சியை ஒன்பது பாகங்களாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்துக்கும் ஒரு தனி டைரக்டர் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். கீழ்க்கண்ட பாகங்கள் தான் அடிப்படை ஆராய்ச்சியின் கிளைப் பாகங்கள் : 1. நிறுத்தல், நீட்டல் அளவை (டாக்டர் கே. என். மாதுர்) 2. உயர்தர யந்திர நுட்ப இலாகா (வி. கடாம்பி) 3. உஷ்ண,



பௌதிக ஆராய்ச்சிக்கான உபகரணங்கள் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் கூடம்.

சக்தி இலாகா (டாக்டர் காய்) 4. ஒளிச் சிதறல் (டாக்டர் வைத்தியா) 5. மின்சார இலாகா (ஸ்வாமி ஞானனந்தா) 6. ஒலிப் பரப்பு 7. சப்த சம்பந்த விஞ்ஞானம் (டாக்டர் பார்த்தஸாரதி) 8. தொழிற் சம்பந்த பௌதிகம் (ஜி. டி. ஜொக்ளெகர்) 9 உயர்தர ரசாயன ஆராய்ச்சி.

நிலையத்திற்குள் நுழைந்ததுமே ஏதோ நவீன தேவலோகத்திற்குள் நுழைவது போன்ற அனுபவம் உண்டாகும். அழுக்கு, தூசு முதலியன இல்லாமல் பளபளப்பான கண்ணாடிக் கதவுகளும் வழுவழுப்பான பரந்த ஹால்களும் ஏதோ இந்திரலோகத்திற்குள் சென்றது போன்ற திகைப்பைக் கொடுக்கும்.

முதல் முதலில் நாம் பார்ப்பது புஸ்தகாலயம். 1350 சதுர அடி விஸ்தீர்ணம் உள்ள இதை மேனாட்டில் செய்திருப்பதுபோல மிகவும் நவீன முறையில் தயாரித்திருக்கிறார்கள்.

இதற்கு அடுத்தாற்போல் உள்ளது ஒரு பிரும்மாண்ட பொதுஜன அரங்கம் (Auditorium). இதில் 837 பேர்கள் உட்கார வசதி உண்டு. சாதாரணமாக ஐக்கிய நாடுகள் சம்பந்தமான விழாக்கள் எல்லாம் இங்கேதான் நடக்கும். இதைப் போல் அற்புதமான நவீன சினிமாக் கொட்டகையையோ அல்லது நாடக ஹாலையோ நான் இந்தியாவில் கண்டதில்லை.

நிலையத்திற்குப் பின்னால் அதைச் சேர்ந்த செப்பனீடு நிலையம் இருக்கிறது. இதைப்போல வொர்க் ஷாப் (workshop) ஆசியாவிலேயே கிடையாது என்று சொல்லுகிறார்கள்.

நிலையம் வேலைசெய்ய ஆரம்பித்தது முதல் திடுக்கிடும்படியான ஆராய்ச்சி எதையும் செய்யவில்லை. ஏனெனில் தொழிற்சாலைகளுக்கும் தொழில்களுக்கும் உபயோகமாக இருக்கக்கூடிய விஷயங்களில் முக்கியமாக ஆராய்ச்சியாளர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆராய்ச்சி என்பது மணிப்பிரகாரம் நடக்கக்கூடிய விஷயம் இல்லை. ஆதலால் வரும் சில வருஷங்களில் நிலையத்தார் இந்திய தொழிற்சாலைகளுக்கு மிகவும் உபயோகமானதாகவும் அந்நிய நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும் சாமான்களின் பாகங்களைத் தவிர்க்கவும் ஏதுவான உண்மைகளை வெளியிடுவார்கள் என்று நம்பலாம்.



டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன்

இந்த நிலையம் ஆரம்பிக்கப்பட்டது முதல் பலவித விஞ்ஞானப் பிரிவுகளில் சம்பந்தப்பட்ட மற்ற நிலையங்கள் ஏற் படுத்தப்பட்டுள்ளன. இதையெல்லாம் சாதாரணமாகச் சாதிக்கக்கூடும் என்று நம்பவேண்டாம். எடுத்த காரியத்தை முடிக்கவேண்டும் என்றஆவேசம் உள்ள வரால்தான் முடியும். சர்க்காரின் நிதி இலாகாவில் எந்தவிதமான திட்டத் திற்கும் அனுமதி வாங்குவது கஷ் டம். தேச நலனைக்கருதி, பல நிலையங் கள் கட்டுவதற்குத் திட்டம் போட்டு, நிதி வாங்கி திட்டங்களை முடித்த டாக் டர் பட்நகர் உண்மையில் பெரிய காரி யப்புலி என்பதில் சந்தேகம் இல்லை.

டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் ஒரு நிறை குடம். அவருடன் பேசும் பொழுது ஒரு மகா மேதையுடன் பேசு கிறோம் என்ற அனுபவம் ஏற்படுவ தில்லை. ஏனென்றால் பாமரர்களாகிய நம்முடன் ஒருவராகத் தம்மைப் பாவி த்து, அளவளாவும் இந்த விஞ்ஞானி கலை, மதம், சங்கீதம் எல்லாத் துறைகளி லும் அபார ஞானம் உள்ளவர். மமதை, பதற்றம், கர்வம் எல்லாம் இவர் இருக் கும் திக்கை நோக்கிக்கூட அண்ட மாட்டா. யார் வேண்டுமானாலும் இவ ரைப் பார்த்து எந்தவிதக் கூட்டத்திற் கும் இவர் தலைமையைக் கோரலாம். குறிப்பாக, தென்னிந்தியர் யாவரும் இவரை ஒரு சொந்தக்காரராகப் பாவிக் கிறார்கள் என்றால் பார்த்துக்கொள்ளுங் கள்.

பௌதிக விஞ்ஞான நிலையத்திற்குக் கட்டிடத்திற்கு மாத்திரம் பணத்தை, கரிட் தொட்டித் தராசில் நிறுத்து வீசி னார்கள். ஆராய்ச்சிக்கு வேண்டிய சாத னங்களுக்குக் கேவலம் பத்து லக்ஷம் கூடச் செலவழிக்கவில்லை என்றபழி கூறுவதுண்டு. ஓரளவில் இது உண்மை தான். இதை நீக்கி, விஞ்ஞானிகளுக்கு உத்ஸாக மூட்டினால் இந்த நிலையம் மிக வும் முன்னேறும் என்பதில் சந்தேகம் இல்லை.

# பொங்கல் புதுநாள்

**வி. எஸ். ஸ்ரீநிவாஸன்**

பொங்கொளி எங்கும் விரிந்ததையா—நறும்
பூமணம் எங்கும் பரந்ததையா;
மங்கலப் பெண்கள் வதனமெல்லாம்—இன்ப
மாமுறு வல்ஔளி பூத்ததையா.

வீட்டினில் கோலங்கள் தீட்டிவைத்தார்—மின்னல்
மெல்லிடை யில்குடம் கூட்டிவைத்தார்
பாட்டினைப் பண்ணுடன் தீங்குரலில்—மெல்லப்
பாடியே ஆடிநீ ராடிவந்தார்.

தங்க நிறக்குடம் தாங்கிவந்தார்—இடை
தாங்கவொண் ணுதவர் ஏங்கிவந்தார்
'இங்கே கொடு'வென்று ஏந்திவந்தார்—அவர்
இன்ப மணுளர்அன் பாகிடுவார்.

குத்து விளக்கு நிறை நாழி—மலர்
குங்குமம் சந்தனம் வாழைக்கனி
மெத்தப் பருத்தநல் தேங்காய்கள்—சுவை
மென்கரும்பும் கொண்டு வைத்துநின்ருர்.

புத்தம் புதியபொற் பானையதைக்—குளிர்
பொற்கரம் கொண்டுலே யேற்றிவைத்தார்
சித்தம் மகிழப்பால் பொங்கிடவே—தளிர்ச்
செம்மேனி எல்லாமே பொங்கிநின்ருர்.

கண்ட கணவர் களித்துநின்ருர்—வழி
கண்டிடுவோம் இந்தத் தையிலென்ருர்
கொண்ட களிப்பிணைக் கூறலாமோ!—இன்று
கொள்ளும்நல் லின்பத்தைத் தேறலாமோ!

வானவனே! தினம்தோன்றி மறைந்திடும்—சுடர்
மன்னவனே! சிவன் கண்ணவனே!
மானவனே! அருள் தேனவனே!—கதிர்
மாமணியே! சற்றுக் கடைக்கணியே!

என்று மக்களெல்லாம் ஏத்திநின்ருர்—என்றும்
இன்ஞெளி வீசிடப் பொங்கலிட்டார்
நன்று செயுமந்த ஞாயிறவன்—மக்கட்கு
நல்லறி வூட்டிடத் தோன்றிவந்தான்.

என்கடன் பணிசெய்வ தையா!—எனக்கு
எவரும் சமமென்ப தறிவிரையா!
மின்ஞெளி எல்லோர்க்கும் வீசிடுவேன்—நுங்கள்
மேனி நிலையாமை பேசிடுவேன்.

என்று சொல்லிவழி காட்டிவந்தான்—அந்த
இன்ப வழிநின்று வாழ்வமையா!
நன்றே மற்றவர்க்கு ஆற்றிடுவோம்—இந்த
நானிலம் நம்மைப் போற்றியிடும்.

# டில்லித் தபால்

கே. ஸ்ரீநிவாஸன்

### ஆந்திர மாகாணம்

ஆந்திரர்கள் விரும்பியிருந்தால் இன்று அல்ல, ஏறக்குறைய மூன்று வருஷங்களுக்கு முன்னரேயே தனி மாகாணம் பெற்றிருக்கக்கூடும். ஏன் பெறவில்லை என்று கேட்கத் தேவையில்லை. பொட்டி ஸ்ரீராமுலு என்ற நல்ல ஆத்மா தம் ஆத்மாவை இதற்குத் தியாகம் செய்யவேண்டும் என்று இருந்திருப்பதை யார் அறிந்திருப்பார்கள்?

சுதாவாகவே ஆந்திரம் என்பதற்குப் பதில் ஆத்திரம் என்பது பொருந்தும் என்று ஆந்திரர்களே சொல்லுகிறார்கள். எதையும் தீர ஆலோசிக்கும் குணம் அவர்களிடம் இடையாது என்பதுடன் அவர்களின் தலைவர்களும் அடுத்து வரக்கூடிய நிலை என்ன என்பதை அறியமுடியாதது மிகவும் துரதிர்ஷ்டவசமான விஷயம். இதுவும் தவிர ஆகாயத்தில் பறப்பதைப் பிடிக்கவேண்டும் என்று யாராவது சொன்னால் அதுதான் அவர்களுக்குப் பாந்தமாக இருக்குமே அல்லாது கொஞ்சம் விஷயம் தெரிந்தவர், நாலு பேர்களின் நன்மதிப்பைப் பெற்ற தலைவர், விஷயத்தைத் அப்பட்டமாகத் தெளிவுபடுத்திச் சொன்னால் அந்தத் தலைவருக்குப் பிடித்தது அனர்த்தம்.

ஏறக்குறைய இந்த நிலைதான் 1949-ஆம் வருஷ மத்தியில் ஏற்பட்டது. ஆந்திர மாகாண அமைப்பைப்பற்றிப் பரிசிலனை செய்ய ஏற்படுத்தப்பட்ட கமிட்டியை ஜெ. வி. பி. கமிட்டி (J. V. P.) என்று சொல்வது. அதில் அங்கத்தினர்களான ஜவாஹர்லால், வல்லபபாய்,பட்டாபி மூவரில் யாரும் தமிழர் அல்லா. அப்படி இருந்தும் கமிட்டியின் அறிக்கை யாது? சச்சரவுக்கு உள்ளாகாத பிரதேசங்களைக்கொண்டு ஆந்திர மாகாணம் அமைத்துவிடலாம். ஆனால், (இது பெரிய ஆனால்) ஆந்திரர்கள் சென்னையில் உரிமை கொண்டாடுவதை அறவே விட்டுவிடவேண்டும்.

ஆந்திரர்களுக்கு எவ்வித உரிமையும் இடையாது என்பதை மனப்பூர்வமாக உணர்ந்தவர் அப்பொழுது காங்கிரஸ் அக்கிராசனராக இருந்த டாக்டர் பட்டாபி. ஆகவே. அவர் ஜெ. வி. பி. ரிபோர்ட் சமர்ப்பிக்கப்பட்டவுடன் சென்னைக்கு விரைந்தார். அவர் வந்தபொழுது இருந்த உத்ஸாகம் தொடர்ந்து வந்த நாள்களில் அவருக்கு இல்லாமல் போயிற்று. அவர் அப்பொழுது பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசுகையில் ஆந்திரர்கள் இன்னமும் சென்னை உரிமையைப் பற்றிப் பேசுவார்கள் என்று நம்பவே இல்லை. ஆதலால்தான் மாகாணம் அமைக்க என்ன என்ன கட்டங்கள் மூலம் செல்லவேண்டும் என்பதை விஸ்தரிப்பதில் ஈடுபட்டார்.

உண்மையில், அப்பொழுது தேவையாக இருந்ததெல்லாம் சென்னை மாகாண இரு சட்ட சபைகளும் ஒரு தீர்மானம் நிறைவேற்றவேண்டும், பிறகு ஒரு பிரிவினைக் கமிட்டி ஏற்படுத்தப்படும், அந்தக் கமிட்டி மாகாண வருமான, வினியோகக் குறிப்புகளையும் சர்க்கார் ஊழியர்கள் முதலிய விஷயங்களையும் கவனிக்கும் என்பதுதான். இதெல்லாம் ஏற்பட்டது, செவ்வனேயும் நடந்தன. ஆனால் குயவனுக்கு ஒருநாள் வேலை — தடியனுக்கு அரை நாழிதான் ஆயிற்று—நொறுக்கித்தள்ள.

ஆந்திர அபிப்பிராயத்தைத் தெரிவிக்க ஏற்படுத்தப்பட்ட மகாநாட்டில் மாகாணம் வேண்டும் என்ற தீர்மானத்தைச் சென்னையைப்பற்றிய ஷரத்துடன் நிறைவேற்றினார்கள். ஏன் பட்டாபி ஆந்திர சட்டசபை அங்கத்தினர்களைக் கூட்டிப்பேச ஏற்பாடுசெய்துவிட்டுப் பிறகு கூட்டத்திற்கு வரவில்லை என்று கேட்கப்பட்டது. பட்டாபி வரத்தான் வந்தார். ஆனால் சென்னையில் ராஜாஜி ஹாலுக்கு வெளியே வந்ததும் ''நீங்கள் வராதீர்கள். உள்ளே அங்கத்தினர்கள் யாவரும் பிரகாசம்காருவின் கக்ஷியையே பேசுகிறார்கள். வந்தால் அனர்த்தம்'' என்று டாக்டர் பட்டாபியின் அனுதாபி நண்பர் ஒருவர் சொல்லவே தம் திட்டத்தை மாற்றிக்கொண்டு வீடுநோக்கி விரைந்தார் டாக்டர் பட்டாபி. அதற்குப்பிறகு நிலை நிலையாகப் பிரகாசம் காரமாரி, ரங்காகாரு, அவர்மாறி புலுஸுகாரு, அவர் மாறி காளேசுவர ராவ்

பல்லவி பாடினது யாவரும் அறிந்ததே. ஆந்திரப் பிடிவாதம் காரணமாகச் சுலபமாக வரவிருந்த மாகாணம் தடைபட்டது, மூன்று வருஷங்களில் காலச்சக்கரம் சுழன்றது. காலனும் ஸ்ரீராமுலுவைக் கைப்பிடித்தான். இன்று ஒன்றும் புதிது நடக்கவில்லை, ஆனால் ஆந்திர மாகாணம் வரப்போகிறது.

ஆந்திரமாகாணப் பிரிவினை சம்பந்தமாகச் சென்னை வந்திருக்கும் ஸ்ரீ ஜஸ்டிஸ் வாஞ்சு மாகாணத் துண்டிப்பு விஷயமாக விவரங்களைக் குறித்து யாதாஸ்து தயார்செய்யவே வருகிறார். சென்ற தடவை ஆந்திர-தமிழ் அங்கத்தினர்கள் கொண்ட பிரிவினைக் கமிட்டியில் ஆந்திரர்களைத் தமிழர்கள் ஏமாற்றி விட்டார்கள் என்ற புகார் எழுந்ததைத் தவிர்க்கவே, இந்தத் தடவை ஒரு பாரபட்சமற்றவரை அனுப்புகிறார்கள். ஸ்ரீ வாஞ்சு தாம் எவ்விதத் தகராறையும் தீர்க்கச் செல்லவில்லை என்பதை இங்குத் தெளிவுபடுத்தியதுடன் சொன்னார்: "நான் சென்னை நகர விஷயமாக மேலும் சாக்ஷியம் எடுத்துக்கொள்வேன் என்பது தவறு. உள்ள வியவகாரங்களைச் சிக்கல் இல்லாமல் தெளிவுபடுத்தவேண்டுமே அல்லாது மேலும் பிரச்னைகளை உண்டுபடுத்தக் கூடாது.

ஸ்ரீ பிரகாசம்காருவும் சரி, அவர் சிஷ்யப் பிள்ளை ஸ்ரீவிச்வநாதமும் சரி, எவ்வளவுதான் காரசாரமாகச் சென்னையைப்பற்றிப் பேசி, குப்புறவிழுந்து கதறினாலும் வரும் மாகாணம் சென்னை இல்லாமல்தான் இருக்கும். மாகாணத்தை அமைப்பது ஜே. வி. பி. ரிபோர்ட்டை அடிப்படையாகக் கொண்டிருக்கும். இது விஷயம் மத்திய சர்க்கார் தங்கள் தீர்மானப்பிரகாரமே செய்வார்கள் என்று ஆதார பூர்வமாக அறிகிறேன்.

ஆனால் ஒரு விஷயம் மட்டும் தெளிவுபடுத்தவேண்டும். நேரடியாகச் சாதிக்கமுடியாததை ஆந்திரத் தலைவர்கள் தந்திரமாகச் சாதித்துக்கொள்ள முயல்வார்கள் என்பதற்குப் பல அடையாளங்கள் உள்ளதை அறிவேன். மாகாணம் கொடுத்துவிட்டால் போதுமா, தாற்காலிகமாகவாவது தலைநகரம் வேண்டாமா என்று சொல்வது, அரபியனும் ஒட்டகமும் ஒண்டுக்குடித்தனம் செய்ததை ஒத்தது. பின்னால் மனக்கசப்பும் ஓயாத அடிதடியும் வாராமல் இருக்க வேண்டுமானால், புது மாகாணத்திற்கு விஜயவாடாவிலோ, வேறு எங்கேயோ தலைநகர் ஏற்படுத்திக்கொள்ளச் சொல்லவேண்டும். ஒரிஸ்ஸா தனி மாகாணம் ஆனதும் மூட்டையைக் கட்டிக்கொண்டு குக்கிராமம் போன்ற கட்டாக் நகரத்தில் தலைநகரை ஏற்படுத்திக்கொள்ளவில்லையா?

எப்படியும் புது மாகாணம் இன்னும் ஒரு வருஷம் ஆகும் உரு ஆவதற்கு. அதற்குள் ஆந்திரர்களும் புதுத் தலைநகரைப்பற்றிய முடிவு செய்துவிடலாம்.

புது மாகாணம் சிருஷ்டி செய்து கம்யூனிஸ்ட் கையிலா கொடுக்கப்போகிறார்கள் என்ற கேள்வி எழுகிறது. மத்திய சர்க்கார் இதைச் செய்யப்போவதில்லை என்பது மூடகமாக வெளியாகிறது. முடிந்தால் காங்கிரஸ் சர்க்கார், இல்லாவிட்டால் கூட்டுச் சர்க்கார் அமைப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

ஏற்கனவே, பிரகாசம்காருவைப் பிடிக்க வலை வீசியாகிவிட்டது. சுதாவாக ஆந்திர காங்கிரஸ்காரர்களுக்குப் பிரகாசம் முதல் மந்திரி ஆவது பிடிக்காத விஷயம். ஆனால் தங்களுக்குப் பிடிக்காத ராஜாஜியைக் கம்யூனிஸ்ட்டுகளை ஒடுக்க முதல் மந்திரி ஆகும்படி காங்கிரஸ்காரர்கள் வருந்தியழைக்கவில்லையா? இப்பொழுது குளிர் விட்டதும் மறுபடியும் ஸ்ரீகாமராஜநாடாரைத் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராக்கவில்லையா? ஆனால் ஸ்ரீ பிரகாசத்திற்கும் ராஜாஜிக்கும் ஒரு வித்தியாசம் உண்டு. ஸ்ரீ பிரகாசத்திற்கு முதல் மந்திரிப் பதவி கொடுத்தால் அவர் எந்தக் கக்ஷிக்கு வேண்டுமானாலும் தாவத் தயார். ஆகவே திட்டியதெல்லாம் திண்டுக்கல் என்று நினைத்து அவர் தம் சகாக்களுடைய காங்கிரஸ் கக்ஷியில் குடியேறுவார் என்று இங்கு அறிந்த வட்டாரங்களில் எதிர்பார்க்கிறார்கள்.

முதலில் தற்பொழுது உள்ள ஆந்திர மெம்பர்கள் கொண்ட ஒரு சட்டசபை அமைக்கப்படும். காங்கிரஸ் சர்க்கார் அல்லது கூட்டுச் சர்க்கார் கொஞ்சகாலம் பதவியிலிருந்த பிறகு புதுத்தேர்தல் நடக்கும். அப்பொழுது காங்கிரஸ்தான் மாகாணம் உண்டாக்கிய கக்ஷி என்று மார்தட்டி அமோகமாக வெற்றி பெறலாம் என்று கக்ஷித் தலைவர்கள் திட்டம் வகுக்கிறார்கள்.

ஆனால் எதிர்பார்த்ததற்கு மாறாக ஸ்ரீ பிரகாசம் காங்கிரஸில் சேராமலோ, அல்லது காங்கிரஸுடன் ஒத்துழைக்காமலோ இருந்தால், காங்கிரஸ் சர்க்காரோ அல்லது காங்கிரஸ் பிரஜா ஸோஷலிஸ்ட் கூட்டுச் சர்க்காரோ ஏற்படுவது துர்லபம். அந்தக் கட்

டத்தில் ஸ்திரமான சர்க்கார் ஏற்படவில்லை என்று பிரகடனம் செய்யப்பட்டு, ஜனாதிபதி தாற்காலிக அமல் நடத்துவார். ஆனால் பிரகாசம்காருவும் ஸ்ரீ ரங்காகாருவும் காங்கிரஸுக்குத் திரும்புவது மிக நிச்சயம் என்று சொல்லப்படுகிறது.

* * *

## தேசீய சர்க்கார்

இப்பொழுது ராஜீய வட்டாரங்களிலும் சரி, காங்கிரஸ்காரர்கள் பேசும் பொதுக்கூட்டங்களிலும் சரி, ஐந்து வருஷத் திட்டத்தைப் பற்றியே பேசுகிறார்கள். மிகவும் படாடோபத்துடன் அரங்கேற்றப்பட்டிருக்கும் ஐந்துவருஷத் திட்டமூலம் தேசத்தை அலாக்காகத் தூக்கி, சுபிக்ஷம் என்ற நிலைக்குக் கொண்டு வைத்துவிடவேண்டும் என்று பண்டிதநேரு விரும்புகிறார். திட்டத்திற்குச் சுமார் 1600 கோடி ரூபாய்கள் செலவழியும். இந்தத் திட்டத்தை நிறைவேற்றவே சுமார் 600 கோடி ரூபாய்க்குமேல் வெளிநாட்டு உதவி மூலமும் தேசீயச் சேமிப்பு மூலமும் வர வேண்டும் என்று ஏற்பாடு. இது வருவது என்னவோ மிகவும் சந்தேகாஸ்பதமான விஷயம். ஆகையால் இந்தத் திட்டத்தைப் பூராவாக நிறைவேற்றுவது துர்லபம் என்று பொருளாதார நிபுணர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். உள்ளதற்கே வாலைப்பிடி தோலைப் பிடி என்று இருக்கும்பொழுது ஸோஷலிஸ்ட்கள் இந்தத் திட்டம் இன்னும் பெரிதாகச் செய்யப்பட்டிருக்கவேண்டும் என்று அங்கலாய்க்கிறார்கள்.

கம்யூனிஸ்ட்களைப் பொறுத்தவரையில் அவர்கள் எந்த உருப்படியான விஷயத்திலும் அக்கறை காட்டமாட்டார்கள் எனபது தெரிந்த விஷயம். ஆகவே அவர்களுடைய ஒத்துழைப்பு இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்குக் கிடையாது. வகுப்பு வாதிகள், ஹிந்து மகாசபை, ஜன சங்கம் போன்றகக்ஷியைச் சேர்ந்தவர்கள் தேச நலம் பெரிது என்று இந்தத் திட்டத்தை ஆதரிப்பார்கள் என்று நம்புவது மண் குதிரையை நம்புவதை ஒத்தது.

இந்த நிலையில்தான் பண்டித நேரு ஆழ்ந்து யோசிக்க ஆரம்பித்திருக்கிறார். புதுத் திட்டத்தை வெற்றி யடைய வைக்கப் பொதுஜன உத்ஸாகம் அவசியம். அதிலும் கிராம வாசிகளைத் தட்டிக் கொடுத்து அவர்களின் ஒத்துழைப்பைப் பெற்றால் தான் சமூக திட்டம் (Community Project) வெற்றிபெறும். ஆகவே அரசியல் உலகில் ஒத்துழைக்கக்கூடிய கக்ஷி பிரஜா—ஸோஷலிஸ்ட்

களின் கக்ஷியே. இதனுடன் ஒத்துழைக்கப் பண்டித நேரு பிரயத்தனம் செய்ய ஆரம்பித்திருக்கிறார். தேச நலனைத் தரக்கூடிய திட்டங்களில் இந்தக் கக்ஷி காங்கிரஸுடன் ஒத்துழைக்கக் கூடும், அதுவும் பிற்போக்குக் கக்ஷிகள் எல்லாம் ஒன்று சேர்ந்திருக்கும்பொழுது முற்போக்குக் கக்ஷிகள் ஒத்துழைக்க வேண்டியது அவசியம் என்று பண்டித நேரு ஸ்ரீ ஜயப்பிரகாச நாராயணருக்கு எழுதியிருப்பதாக அறிகிறேன்.

ஸோஷலிஸ்ட் கக்ஷி தனியாக இருந்தபொழுது அரசியல் பற்றற்ற பாரத சேவா சமாஜம் என்ற ஸ்தாபனம் ஏற்படுத்தப்பட்டவுடன் அதனுடன் ஒத்துழைக்கத் தயார் என்று சொன்னார்கள். பின்னால் இந்தக் கக்ஷி கே. எம். பி. கக்ஷியுடன் ஐக்கியமானவுடன், இந்த ஒத்துழைப்பு வாபஸ் வாங்கப்பட்டது. புதுக் கக்ஷியான பிரஜா—ஸோஷலிஸ்ட் கக்ஷி ஏற்பட்டவுடன் அந்தக் கக்ஷிக்குள்ளேயே பிளவு ஜாஸ்தியாகிவிட்டது. அதுவும் ஸ்ரீபிரகாசம் இந்தக் கக்ஷியைவிட்டுக் காங்கிரஸில் சேர்ந்துவிட்டால் பிறகு "பிரஜா" என்ற பெயர் பைஸல் ஆகிவிடும் என்று புதுக் கக்ஷியில் பயம் உண்டாகி இருக்கிறது. தவிரவும் உத்தரப் பிரதேசத் தலைவரான ஆச்சார்ய நரேந்திர தேவாவும் ஸ்ரீ குஜ. பி. நாராயணனும் தேசம் முன்னேற்றம் அடைவதாயிருந்தால் எந்தக் கக்ஷியாக இருந்தாலும் அதன் திட்டங்களுடன் ஒத்துழைக்க வேண்டும் என்று மிகவும் பலமாக அபிப்பிராயப்படுவதால் அடுத்த சில வாரங்களில் காங்கிரஸ்—ஸோஷலிஸ்ட் ஒத்துழைப்புச் சம்பந்தமாக மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கப்படும் என்று மிகவும் ஆதார பூர்வமாக அறிகிறேன். இந்த ஒத்துழைப்பு ஏற்பட்டால் அடுத்துவரும் ஓரிரண்டு வருஷங்களில் தேசிய சர்க்கார் மத்திய அரங்கில் ஏற்படலாம் என்று ராஜீய வட்டாரங்களில் கருதுகிறார்கள்.

* * *

## ஸோஷலிஸ்டுகளின் எதிர்காலம்

ஸ்டாலின் நல்ல முகூர்த்தத்தில் மாஸ்கோ காங்கிரஸ் கூட்டத்தில் சொன்னார்: "உலகில் எங்கெங்கு கம்யூனிஸ்ட்கள் இருக்கிறார்களோ அவர்களுக்கு நம் இயக்கமும் புரட்சியும் கடமைப்பட்டிருக்கின்றன. அந்தக் கடனை அரசியல் துவாரா நாம் திருப்பிக் கொடுக்கவேண்டும்".

இதைப்பற்றி இந்திய சர்க்கார் மிகவும் தீவிரமாக ஆலோசித்து ஸ்டாலின் வார்த்தைகளுக்கு இந்த அர்த்தம்தான் இருக்க முடியும் என்று முடிவுசெய்தனர். அதாவது எந்தத் தேசமாயினும் ருஷ்ய சர்க்கார் அந்தத் தேசத்துக் கம்யூனிஸ்ட் கக்ஷிக்கு வலுவும் ஆதரவும் கொடுக்கும். இதைப் பற்றி வீணுகப் பேசுவானேன்? என்று கம்யூனிஸ்ட் செல்வாக்கு ஓங்கவிடாமல் காரியத்தில் காண்பிப்பது என்று தீர்மானம் செய்துவிட்டனர். இதை ஐந்து வருஷத் திட்டம், சமூக சேவைத் திட்டங்கள் மூலம் சாதிக்கலாம் என்பது இவர்கள் நம்பிக்கை.

கம்யூனிஸ்ட்களின் பரமபிதா என்று கருதப்படுபவர் கார்ல் மார்க்ஸ். இன்று அவர் உலகத்துக்கு வந்து ருஷ்யாவைப் பார்த்தால் ஏன்தான் சமதர்மக் கொள்கையைப்பற்றிய இலக்கியம் உண்டாக்கினோம் என்று தூக்குப் போட்டுக் கொண்டு இறந்துவிடுவார். கார்ல் மார்க்ஸின் பெயரால் தேசத்தை ஒரு பெரிய சிறையாக மாற்றி, பாட்டாளியைப் பயம்பிடித்த பேதையாக மாற்றி, தனிப்பட்ட நபர் சுதந்திரத்தைப்பறித்து, ஸ்டாலின் கோஷ்டியார் சர்வாதிகாரம் நடத்துவது அந்த மேதையை அவமதிப்பதாகும். அப்படியிருந்தும் உலகில் எந்தக் கம்யூனிஸ்டை வேண்டுமானாலும் கேளுங்கள். கார்ல் மார்க்ஸைப் பற்றி, அவர் தம் பாட்டனார் என்ற தோரணையில்தான் பேசுவார்.

கம்யூனிஸத்தை நிறுத்த கார்ல் மார்க்ஸ் சித்தாந்தத்தை முழுதும் நம்பும் ஸோஷலிஸ்ட்களால்தான் முடியும் என்பதை ஆசியாவில் உள்ள ஸோஷலிஸ்ட்கள் உணர்ந்துவிட்டார்கள். இங்கிலாந்தில் ஸோஷலிஸம் கம்யூனிஸம் இருக்கும் இடம் தெரியாமல் விரட்டிவிட்டது. ஆனால் மேற்கத்திய ஸோஷலிஸ்ட்கள் ஆசியாவைக் கவனிப்பதில்லை, ஆகவே நாம் தனிப்பட்ட ஆசிய ஸோஷலிஸ்ட்கள் சங்கம் ஏற்படுத்தவேண்டும் என்று இந்திய ஸோஷலிஸ்ட்கள் இப்பொழுது ரங்கூனில் நடக்கும் உலக ஸோஷலிஸ மாநாட்டில் யாதாஸ்து சமர்ப்பித்திருக்கிறார்கள்.

உலகத்தில் ஸோஷலிஸ்ட்களிடையே பிளவு ஏற்படுவது மிகவும் துரதிர்ஷ்ட வசமான விஷயம் என்று உலக ஸோஷலிஸ்ட்களுக்குத் தாயகமான இங்கிலாந்தில் உணர்ந்துதான் மாஜி பிரதமரான ஸ்ரீ ஆட்லியை ரங்கூனுக்கு அனுப்பியிருக்கிறார்கள்.

ஸ்ரீ ஆட்லியின் ஆட்சியின்பொழுதுதான் சில ஆசிய நாடுகளுக்குச் சுதந்திரம் கிடைத்ததால் ஸ்ரீ ஆட்லியின் வார்த்தைகளுக்கு மதிப்பு வைப்பதுடன் ஆசிய ஸோஷலிஸ்ட்கள் அடுத்து வரும் ஐந்து வருஷங்களுக்கான திட்டத்தை மற்ற நாட்டு ஸோஷலிஸ்ட்களுடன் கலந்து வகுப்பார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

"இத்துடன்" கம்யூனிஸ்ட்கள் என்றாலும் நாங்களும்தான் கம்யூனிஸ்ட்கள். நாங்கள் கார்ல் மார்க்ஸைத் தலையால் வணங்குகிறோம். ஆனால் நாங்கள் எங்கள் தேசத்தை ஸ்டாலினுக்கு அடிமைப்படுத்தவில்லை" என்று மார்தட்டும் அசல் ஸோஷலிஸ்ட்களான யுகொஸ்லோவியாவின் தலைவர்களும் ரங்கூனுக்கு வந்திருக்கிறார்கள். மொத்தத்தில் ஸோஷலிஸ்ட்கள் விழித்தெழுந்து விட்டார்கள். தங்கள் தங்கள் திட்டத்தை அடுத்த சில வருஷங்களுக்கு எப்படி வகுக்கவேண்டும்

என்று பல தேசத் தலைவர்கள் அலசி முடிவு செய்வார்கள். ஸ்டாலின் தம் திருவாயைத் திறக்காமல் இருந்திருந்தால் இது சாத்தியமாக இருந்திருக்குமா?

ரங்கூன் வந்திருக்கும் ஸோஷலிஸ்ட் தலைவர்களில் பலர் இந்தியாவுக்கு வரப்போகிறார்கள். அவர்களுடைய அனுபவத்திலிருந்தாவது நம் நாட்டில் தொழில், விவசாய இயக்கங்களை ஒன்றுபடுத்துவதற்கு வழியை நம் ஸோஷலிஸ்ட்கள் தெரிந்துகொள்வார்கள் என்று எதிர்பார்க்கலாம்.

## எம். ஆர். ஏ.

கம்யூனிஸத்தை எதிர்க்கப் பல கட்சிகள் தோன்றியிருக்கின்றன. அவைகளுள் ஒன்று எம். ஆர். ஏ. கோஷ்டி

சென்ற ஒரு மாதமாக எம். ஆர். ஏ. (M. R. A. Moral Rearmament) என்ற கோஷ்டியார் டில்லியில் முழங்கிக்கொண்டு இருக்கிறார்கள். இவர்கள் தலைவர் டாக்டர் புக்மென், ஜர்மானியர். இவர்கள் நோக்கம் என்னவென்றால் மனித குணத்தை மாற்றினால் உலகில் நாடுகளுக்கிடையே நல்லுறவு கிட்டுவதுடன் வல்லரசுகளிடையேயும் நல்ல எண்ணம் உண்டாகலாம். "உலகில் யாவருடைய தேவைக்கும் வேண்டிய பொருள் இருக்கிறது. ஆனால் ஒவ்வொருவருடைய பேராசைக்கு வேண்டிய அளவு இல்லை." "உலகில் ஒவ்வொருவரும் போதிய அளவு கவலைகாட்டி போதிய அளவுக்குப் பகிர்ந்துகொண்டால் ஒவ்வொருவருக்கும் வேண்டிய அளவுக்குத் தேவையான பொருள்கள் கிடைக்கும்." இது போன்ற பலவித சுலோகங்களை ஊரெங்கும் பொறித்துத் தள்ளுகிறார்கள்.

டாக்டர் புக்மென் கோஷ்டியில் சுமார் 200 ஆடவர்களும் பெண்களும் உளர். பற்பல நாடுகளைச் சேர்ந்த அவர்களில் டாக்டர்கள், வக்கீல்கள், எழுத்தாளர்கள், எஞ்ஜினியர்கள், சுரங்க வேலை நிபுணர்கள், சர்க்கார் உத்தியோகம் பார்த்த புலிகள் முதலானவர்கள் இருக்கிறார்கள். தினந்தோறும் இவர்கள் பொதுக்கூட்டம் ஒன்று போட்டு அந்தக் கோஷ்டியில் உள்ளவர்கள் தத்தம் மனமாற்றத்தைப்பற்றி அளக்கிறார்கள். சில நாட்கள் சென்றதும் இங்குள்ளவர்களும் அவர்கள் படாடோபத்திற்கு மதிப்புவைத்துத் தாங்களும் மனம் மாறியதாக அவர்கள் கூட்டத்தில் பேசுகிறார்கள்.

உண்மையில் எம். ஆர். ஏ. என்ன சாதித்திருக்கிறது, என்ற கேள்வியைக் கேளாதவர்கள் கிடை

யாது. அவர்கள் கொள்கையை அமல் நடத்த ஏதும் செய்யாத இவர்கள் உண்மையில் நாடகக் கலையில் அற்புதமாக முன்னேறியிருக்கிறார்கள். டில்லியில் அவர்கள் நடத்திய "ஜாதம் பள்ளத் தாக்கு" "மறந்த குறிக்கோள்" "திரம் மிகுந்த அன்னி" என்ற நாடகங்கள் மிகவும் அற்புதமாக இருந்தன. நாடக அரங்க அமைப்பு, விளக்கு ஏற்பாடு, சீன்கள் எடுப்பு முதலியவைகள் இது வரை இந்தியாவில் நாம் கண்டிராதவை. நடிகர்களும் மிகவும் அபாரமாக நடித்தனர்.

இதையெல்லாம் ஏன் எழுதினேன் என்பதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று, இதே கோஷ்டி கல்கத்தாவுக்கு விஜயம்செய்து பிறகு சென்னைமீதும் படையெடுப்பார்கள் என்று அறிகிறேன், ஆகவே ஜனங்கள் வேறு எதுவும் தெரிந்துகொள்ளாவிட்டாலும், நாடகம் நடந்தால் (நாடகங்கள், இலவசம், கட்டணம் கிடையாது.) அவைகளைப் பார்க்கவேண்டும்.

இரண்டாவது எம். ஆர். ஏ. கம்யூனிஸத்தை எதிர்க்கவென்று ஏற்படுத்தி நடக்கும் ஒரு நடவடிக்கை என்று சொல்லுகிறார்கள். இது எங்வளவு தூரம் உண்மை என்று சொல்ல முடியாது. ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். இந்தக் கோஷ்டிக்கு நிதம் செலவு மட்டுமே ரூ. 2000 ஆகிறது. இதைச் சமாளிக்கிறார்கள், நாடகங்களுக்கும் கட்டணம் கிடையாது என்பதிலிருந்து இந்த இயக்கத்திற்குப் பொருளாதார உதவி எங்கிருந்தோ கிடைக்கிறது என்பது தெளிவாகிறது. பலாத்கார கம்யூனிஸத்தை ருஷ்யா ஆதரிக்கும்பொழுது, சாத்வீகத்தை அடிப்படையாகக் கொண்ட இந்த இயக்கத்தை எந்த நாடும் ஏன் ஆதரிக்கக்கூடாது. பலன் எவ்வளவு தூரம் என்பது வேறு பிரச்னை.



# லக்ஷ்ய புருஷன்

**கே. சுந்தரம்மாள்**

6

"இவர்களின் சுற்றுப்பிரயாணத் தகவலைக் கேட்டு, இவர்களை வழியனுப்ப வந்த விஜயா தம்பதிகள், ராஜாவின் தாயாரிடம், ஹேமாவின் கல்யாணத்தை ஏன் நடத்தவில்லை யென்று கேட்டு விஷயமறிந்ததும் ராஜாவின் அறைக்குள் சென்ற சிவஸ்வாமி,

"ஏண்டா பழி! உனக்கு மூளை கலங்கிவிட்டதா?" எனக்கேட்ட வண்ணம் சோபாவில் அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அவன் தோளில் கை போட்டு அணைத்துக்கொண்டான்.

"ஏனிந்தக் கேள்வி?" என்று அவன் தோளில் கை போட்டு அணைத்துக்கொண்டான்.

"தாலி கட்டாமல் தாம்பத்யம் கொண்டாடப் போகிறாயாமே?"

"யார் அப்படிச் சொன்னது?"

"சொல்ல வேறு வரவேண்டுமா கிழவியைப் யென்று? கல்யாணமில்லாமே, அவளுடன் தாம்பத்ய வாழ்க்கை நடத்தப் போகிறாயோ? அதென்னவென்று பெயர்?"

"இதுவரையிலு மிருந்து வரவில்லையா? அது போல் தான் இருக்க வேண்டும். என் லக்ஷ்யம் தான் உனக்கும் தெரியுமே, அதைச் செய்கையில் காட்டப் போகிறேன். நீயும் நானும் பழகும்விதம் பழகிக் கொள்ளுவதாகத் தீர்மானமே தவிர, தாம்பத்ய உறவு என்பதுபற்றிக் கனவிலும் கருதவில்லை. அப்படியானால் தான் அவள் கலை வளரும்."

"அவள் உணர்ச்சிகளைப் பற்றி அக்கரையில்லையா?"

"அவளின் முழுச் சம்மதத்துடன்தான்"

"மனித ஆதரவின்றி வளர்ந்து வரும் பொழுது அதிக ஆதரவு காட்டி நீ வளர்த்ததினால் உன் வாக்கு அவளுக்குத் தேவ வாக்காகத் தோன்றினது; இன்று வரை அப்படியே தானே நடந்து வருகிறாள். இந்த விஷயத்திலும், உன் சொற்படி நடக்க வேண்டுவது, கடமை என்று ஒத்துக் கொண்டிருப்பாள். அவ்வளவே தவிர, இதனால் ஏற்படும் அவச்சொல்லைத் தாங்கிக் கொள்ளலாம் என்ற தைரியத்தினாலன்று."

"என்னடாப்பா இது சுத்த கியூஸன்ஸாக இருக்கிறது? ஒரு ஆணும் பெண்ணும் ஓரிடத்தில் சேர்ந்து இருக்கவேண்டுமென்றால் கணவன் மனைவி என்ற முறையில் தான் இருக்க முடியுமா? இது என்ன மூடக்கொள்கை?"

"அதற்கென்ன செய்வது? அது சிருஷ்டியின் விநோதம். உன்னுடைய கொள்கையைக் கடைப்பிடிப்பதற்கு, ஹேமா, புருஷனால் நிராகரிக்கப்பட்டுக் கதியில்லாத நிலைமையில், இருந்தால், அது சரியாகும். அல்லது அவள் விதவையாக இருந்தால் உன் பரிசுத்த நடத்தையை உலகம் ஒத்துக்கொள்ளும்......" என்று முடிக்குமுன்,

"சிவ சிவா என்னடா உளறுகிறாய்?" என்று இடைமறித்தான். "உன் மழலைப் பாட்டிற்கு அனுசுரம். முட்டாள், அவள் கன்னிப் பெண். உலகின் இன்பத்தைப் பருக, தாகத்துடன் நிற்கும் பருவ மங்கை. ஏதோ ஒரு மனப்ராந்தியால் இப்படி உளறுகிறாயே தவிர, உன் மனச்சாக்ஷி, என்ன கூறுகிறது?"

"பிரும்மசரியத்தைக் கடைப்பிடியென்று."

"அப்படியானால் அவளுக்கு இந்த மாதத்திலேயே யாராவது ஒரு வரனைப் பார்த்துக் கல்யாணம் செய்து அனுப்பிவிடு."

"அதுமுடியாது, நடக்காத விஷயம்."

"ஏன்?"

"கல்யாணப் பிணைப்பில்லையே தவிர, அன்பின் பிணைப்பை ஒருவராலும் பிரிக்கமுடியாது. அவள் என்னைவிட்டுப் பிரியமாட்டாள். வேண்டுமானால் நான் அடுத்த அறையில் மறைந்துகொள்ளுகிறேன்; அவளைக் கூப்பிட்டுக் கேள்."

அவன் மறைந்ததும் கூப்பிடவேண்டிய அவசியமில்லாமலேயே, அவ்விடம் வந்த ஹேமா "மாமா எங்கே?" என்றாள்.

"எங்கோ வெளியில் சென்றான் ஐந்து நிமிஷத்தில் வருகிறேனென்று சொல்லிவிட்டு. அவன் வருவதற்குள் ஒரு விஷயம் உன்னிடம் சொல்ல வேண்டும். அவசர வேலையில்லையே?"

"சாமான் எடுத்து வைக்க வேண்டியதுதான். அவர் வந்த பின்புதான் செய்யமுடியும். அதனால் சொல்ல வேண்டியதைச் சொல்லுங்கள்."

"அந்தப் பைத்தியக்காரன் லக்ஷ்யம் லக்ஷ்யம் என்று சொல்லிக்கொண்டு, சமூகம் ஒப்பாத காரியத்தைச்செய்கிறன். அதற்கு நீயும் சரியென்று ஒத்துக்கொள்ளுகிருயா?"

"ஒத்துக்கொள்ளுவதில் தவறென்ன!"

"தவரு? உன் வாழ்க்கையே பாழாகிவிடும். நடனமாடுவதற்கும் கல்யாணத்திற்கும் என்ன விரோதம்?"

"அவர் அப்படி நினைக்கிருர். அவரைப் பின்பற்றுவதில்தான் இருக்கிறது என் சந்தோஷம்."

"உன் சந்தோஷமிருக்கட்டும். இவன் லக்ஷயத்தைக் கட்டிக்கொண்டு அழட்டும். உனக்கு நல்ல வரனுப் ஒன்று பார்த்துக் கல்யாணம் செய்துவிடுகிறேம். என் நண்பரொருவரின் தம்பி உயர்ந்த உத்தியோகத்திலிருக்கிருன். இருபத்துநாலு வயதுதான்; நன்ருகப் பாடுவான்; நல்ல அழகன்; உனது நாட்டியத்தில் அவனுக்கு அதிக மோகம்; அவனைக் கல்யாணம் செய்துகொண்டாயானல் உங்களை நன்கு பிரகாசிக்க வசதி செய்வான். சுற்றுப் பிரயாணம் அவனே செய்யட்டும். நீ என்கூடப் புறப்படு; பிரதிபாவை எடுத்துக்கொண்டே செல்லலாம்."

"சுற்றுப் பிரயாணம் நான் நடனமாட. அவருக்கு அவசியமில்லை. அவர் ஆடப்போவதில்லை" எனச் சிரித்தாள்.

"அவன் எப்படியாவது போகட்டும். நீ புறப்படு."

"அவர் அனுப்பமாட்டார்."

"அனுப்பமாட்டேன் என்று சொல்ல அவனுக்கு என்ன உரிமை இருக்கிறது? உரிமையை உதறித் தள்ளுகிருன்."

"ஏன்? எனக்கு வர விருப்பமில்லை. எப்படிப்பட்ட புருஷனுனாலும் எனக்குத் தேவையில்லை. அவரைப் பிரிந்து வாழமுடியாது."

"பிரியும்படி ஒருவரும் சொல்லவில்லை. பிரியாமலிருக்கும் பாதை சரியில்லை. அதற்காகவே இவ்வளவு வற்புறுத்தல். கல்யாணமில்லாமல் இருவரும் சுற்றுப் பிரயாணம் செல்லுகிறீர்கள். மஹாயோகிகளே மனந்தடுமாறியிருக்கிருர்கள். இவன் எம்மாத்திரம்? அவன் ஆண்பிள்ளை தப்பித்துவிடுவான். நீ தாய்மை ஸ்தானம் பெற்றதும், எனக்கு யாதொரு சம்பந்தமுமில்லையென்று சொல்லிவிட்டால் உன் கதி?"

"சொல்லமாட்டார்."

"மனிதனின் மனம் காலவேறுபாட்டினுல் மாறும். எதுவும் நாம் நினைப்பதுபோல் நடப்பதில்லை, யோசித்துப் பார்."

"யோசிக்க ஒன்றுமில்லை. அப்படி நேர்ந்துவிட்டாலும் தைரியமாக எதிர்த்துப் போராடுவேன். வெற்றியும் பெறுவேன் என்ற நம்பிக்கையுண்டு. எனதுமீதுள்ள பாசத்தினுல் நீங்களும் பச்சையாகவே கேட்டுவிட்டீர்கள். நானும் லஜ்ஜையின்றிப் பதிலும் சொல்லிவிட்டேன். தயவு செய்து அவர் வரும்சமயம் இதைப்பற்றின பேச்சே எடுக்கவேண்டாம்."

"சபாஷ் ஹேமா! எனது லக்ஷயப் பெண்ணல்லவா?" என்று கூறியபடி உள்ளே வந்தான் ராஜா.



"உபதேசம் மண்டை நிறைய ஏற்றப்பட்டிருக்கிறது. இப்பொழுது நான் சொல்லுவது ஏருதுதான். 'புத்தி கர்மானுசாரம்.' ஆனுல் ஒன்று சொல்லக் கடமைப்பட்டவன். உத்தம நண்பனென்ருல் கசப்பான உண்மையை எடுத்து உரைப்பதுதான் தர்மம். இந்தச் சுற்றுப் பிரயாணம் முடிவதற்குள்ளாகவே உங்கள் உறுதியின் அஸ்திவாரம் கலகலத்துவிடும். எங்குச் சுற்றினுலும் ஒருநாள் கணவன் மனைவியாகவே ஆகப்போகிறீர்கள். கொஞ்சம் அபவாதத்தைக் கட்டிக்கொள்ளவேண்டுமென்பது உங்களது விதி, அவ்வளவுதான்" என்று சொல்லிக்கொண்டிருக்கையிலேயே உள்ளே சென்றுவிட்டாள் ஹேமா.

"உன் கடமை தீர்ந்துவிட்டதல்லவா?" என்ருன் ராஜா.

"என் கடமை தீர்வது இருக்கட்டும். உன் கடமையை மறந்துவிட்டாயே? சாகுமுன் பிரேமா உன்னிடம் என்ன சொல்லிப்போனுள். அதையாவது சொல்லு."

"என்ன சொல்லுவாள்? நீங்கள் சொல்லுவதையே செய்யும்படி வாக்குறுதி வாங்கிக்கொண்டாள்."

"அதை நிறைவேற்றுவது உன் கடமையல்லவா?"

"அவளிடமும் ஹேமாவின் இஷ்டவிரோதமாகச் செய்யமுடியாது என்று சொல்லிவிட்டேன். ஹேமா வேறு ஒருவரையும் வரிக்கவில்லையென்று சொன்னுளே தவிர, ஹேமாவினிடம் வாக்குறுதி பெற்றதாகத் தெரியவில்லை. அவள் லக்ஷ்யம் குழந்தை வளர்ப்பு. அதற்கு விரோதமில்லாமல் நடக்கவேண்டியதுதானே கடமை. இப்படியே நடந்து வருகிறது. என்ருவது ஹேமாவின் மனம் சலனமுறுகிறது என்று என் மனம் அறிந்தால் அன்று அவள் என் மனைவியாவாள். அவ்வளவே"

"இப்பொழுது அவள் மனம் உன்னை விரும்பவில்லையென்பது உனது வாதம்."

"அந்த முடிவிற்குத்தான் வரவேண்டியிருக்கிறது அவளின் போக்கு. நான் அன்று எனது திட்டத்தைக் கூறினபிறகுதான் அவள் முகத்திலிருந்த சோகம் நீங்கிச் சந்தோஷமாக நடமாடுகிருள்"

"அன்றுவரை எப்படியும் நீ அவளிடம் கணவன் மனைவி ஸ்தானத்தை எதிர்பார்ப்பாய் என்று நம்பியிருந்திருப்பாள். அந்தத் தாபத்தால் அவள் முகம் வாட்டமடைந்திருக்கும். உன் சொல்லைக் கேட்டதும் இந்த லக்ஷ்யப் பைத்தியம் தெளியுமட்டும் காத்திருக்கவேண்டியதுதான் என்ற முடிவிற்கு வந்திருப்பாள். உன் மனம் சந்தோஷமடைய, தன் மனதைக் கல்லாக்கிக் கொண்டு உற்சாகமாக இருக்கிருள். விஜயாவினிடம் சொல்லி, ஹேமா ஏதாவது சொன்னுளாவென்பதைக் கேட்டறிந்து சொல்லுகிறேன்" என்ருன்.

விஜயா கேட்டதற்கு ஹேமா சொன்ன பதில் இதுதான்.

"நீ எப்படிப்பட்ட வாழ்க்கை நடத்தினுலும்பிரதிபாவை அவள் கணவன் வந்து ஏற்கும்வரை உன்னிடம்தான் வளர்க்கவேண்டும்" என்று வாக்குறுதி பெற்றுக்கொண்டாள் என்பதே. உண்மையைச் சொன்னுல் யாவரும் கூடி அவளை நல்ல வார்த்தையினுலோ, உதாசினப் பேச்சினுலோ சம்மதிக்கும்படி செய்து, கணவன் மனைவியானுல் இப்பொழுதிருக்கும் அன்புகூட மறைந்துவிட்டால்? தானுக்க் கனியாத பழத்தைத் தடிகொண்டு பழுக்க வைப்பதைப்போல் நம்மிடம் வெறுப்பு ஏற்பட்டுவிட்டால்? அதனுல் இந்தச் சமயம் அவன் போக்குப்படி விட்டுவிட்டால், ராஜாவின் அம்மா சொன்னபடி அவன் மனதை நாளாவட்டத்தில் திருப்பிவிடலாம் என்ற நினைப்புடன், மேலே வார்த்தைக்கு இடமின்றிப் பதில் சொல்லிவிட்டாள்.

* * *

சரத்காலச் சந்திரன் களங்கமின்றிப் பவனி வந்துகொண்டிருந்தான் ஆகாய வீதியில். மேல் மாடியில் திறந்தவெளியில், நாற்காலியில் உட்கார்ந்திருந்த ராஜா "ஓடிவிளையாடு பாப்பா நீ ஓய்ந்திருக்கலாகாது பாப்பா" என்று பாடிவிட்டு, எங்கே பிரதிபா, அம்மாவைப்போல் ஆடு பார்க்கலாம் என்ருன் எதிரில் நின்ற குழந்தையை.

ஏதோ கையை அபிநயம் காட்டி, காலை இரண்டுதரம் தட்டி மழலைவாயினுல் ஏதோ பாடிக்கொண்டே வந்தாள். பாட்டு முடிந்ததும் கையைத் தட்டிவிட்டு, "பேஷ் பேஷ், வெகு ஜோர் ஆட்டம். இனிமேல் அம்மாதான் உன்னிடம் சொல்லிக்கொள்ள வேண்டும்" என்று சொல்லியபடி குழந்தையைத் தூக்கி அணைத்து முத்தமிட்டான். குழந்தை கொட்டாவி விடவே, மடிமீது படுக்கவைத்துத் தட்டலானுன். தாயற்ற சேயைத் தட்டும்பொழுதே சிந்தனையிலீடுபட்டது மனம். நிமிர்ந்து நோக்கினுன் முழுமதியை. "நான் சுற்றுப் பிரயாணம் தொடங்கின பிறகு நீ மூன்று முறை தேய்ந்து வளர்ந்துவிட்டாய் என் வாழ்வில்?"

சட்டென ஹேமாவின்மீது சென்றது சிந்தனை. அப்பா அவளிடம் எவ்வளவு மாறுதல்? முன்பெல்லாம் அவசியம் நேர்ந்தாலொழிய வலுவில் பேச மாட்டாள். எதிரில் உட்காரமாட்டாள். கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லும்பொழுதே, குரலில் பயம் தென்படும். அப்படிப்பட்டவளிடம் எத்தகைய மாறுதல்? கலகலவெனச் சிரித்துப் பேசுவதுடன், எவள் என் கேள்விக்குப் பதில் சொல்லத் தயங்குவாளோ அவளே கேள்விகள் கேட்க ஆரம்பித்துவிட்டாள். ஏன்? இரவில் சற்று அதிகம் பேசியோ, எழுதியோ செய்தால், கண் விழித்தால் உடம்பிற்காகாது என்று சற்று அதிகாரமாகவே சொல்லலானுள். இவன் உட்கார்ந்திருக்கும் நாற்காலியின் பக்கத்து நாற்காலியில் சர்வசாதாரணமாக உட்காரலானுள், ஏதாவது ஒரு ஊரில் எவ்விடமாவது பார்க்க வேண்டிய இடங்களிருப்பதாகத் தெரிந்தால் "மாமா, இன்று அந்த இடத்திற்கு அவசியம் போகவேண்டும், புறப்படுங்கள்" என்று துரிதப்படுத்துவதுடன், தாயாரையும் விடமாட்டாள். "அம்மா நீங்களும் வந்துதானுகவேண்டும்" என்று பிடிவாதம் செய்வாள். ஒவ்வொரு நாள் தட்டமுடியாமல் கிளம்புவாள். ஒவ்வொரு நாள் தனக்கு உடம்பு சரியில்லையென்று மறுத்தால் சரியென ஒத்துக்கொள்ளுவாளே தவிர விடமாட்டாள். ஒவ்வொரு இடத்

திலும் உற்சாகமாக நடனமாடுவாள். பெயரும் புகழும் பொருளும் அபரிமிதமாகப் பெருகின. வேலை நேரம். இரவு தூங்கும் சமயம், தவிர மற்றைப் பொழுதை ராஜாவின் பக்கத்திலேயே கழிப்பாள். இவ்வளவும் எதனுல்? எல்லோரும் சொன்னபடி செய்திருந்தால் இப்படி வானம் பாடி போல் மாறுவாளா? அவன் மனமறிந்து நடக்கப் பகவான் அருள் செய்தாரே. ஒருவனின் வாக்குறுதிக்காக ஒருத்தியின் வாழ்க்கையை, சந்தோஷமில்லாமல் செய்வதா? இவ்விஷயத்தில் அவன் மனம் ஈடுபடவில்லை. அதுவும் நன்மைக்கே. நமது லக்ஷ்யம் நிறைவேற்றப்படும். ஆனுல் "அவளில்லாமல், ஒரு விஷயமும் அவனுல் செய்யமுடியாது' என்ற நிலைமை ஏற்பட்டுவிட்டது? இப்படித் தனது வாழ்க்கையில் பின்னப்பட்டவளை வேறு ஒருவனுக்கும் அளிக்க முடியாது. என்ற முடிவிற்குவரும் சமயம் அவ்விடம் வந்த ஹேமா "மனதிலுறுதி வேண்டும், இது வாழும் உரிமையடி பாப்பா" என்று பாடிக்கொண்டே அவன் எதிரில் வந்து நின்றவள் "ஊதல்காற்று அடிக்கிறது குழந்தையை இவ்விடம் வைத்துக்கொண்டிருக்கிறீர்களே!" என்ருள்.

எங்கும் நிறைந்த மௌனம். தாவள்யமான நிலவு. குளிர்ந்த தென்றல். அதிரூப ஸௌந்தர்ய வதியான யௌவன மங்கை எதிரில். இவ்வளவும் சேர்ந்து ஓர் யௌவன புருஷனைத் தாக்கினுல் எப்படிப்பட்ட வைராக்ய மனமும். சற்றே சலனமடைவது இயற்கையின் வெற்றி. இல்லாவிடில் உலகத்தின் நிலைமையையே பாதித்துவிடுமல்லவா? பதில் ஏதும் கூருமல் இவளேயே உற்று நோக்கிய வண்ணம் உட்கார்ந்திருந்தான். முன்பானுல், தாங்கச் சக்தியற்றுத் தலை குனிந்திருப்பாள். இப்பொழுது நேருக்கு நேர் அவளும் நோக்கினுள். அவன் மன நிலை ஒருவாறு விளங்கியது சில நிமிஷப் பார்வையில், சட்டெனக் குனிந்து அவன் மடி மீதிருந்த குழந்தையை எடுக்கப் போனுள். அவனையுமறியாமல் அவன் இரு கைகளும் அவள் இரு தோள்களையும் பற்றின.

அவள் மனம் படபடத்தது. தடுக்கவுமில்லை; ஏற்றுக் கொண்டதாகக் காட்டிக் கொள்ளவுமில்லை. பெண்மை வெற்றி கொள்ளும் நேரம் வந்துவிட்டதா? என்று நினைத்த வண்ணம் மேலே அவன் என்ன சொல்லப் போகிருன், என்ன செய்யப் போகிருன்? என்ற நினைப்பில் அவன் கண்களை ஊடுருவிப் பார்த்த வண்ணம் நின்ருள்.

சில நிமிஷம் சென்றன. கையை எடுத்து விட்டு நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டான்,

"இது என்ன?" என்ருள் புன்சிரிப்புடன்.

"இது ஒரு சோதனை" என்ருன் சிரித்தவாறு.

"அப்படியென்ருல்?"

"என் மனதை நானே பரீக்ஷை செய்து கொண்டேன், உன்னை ஸ்பர்சித்தால் என் மனம் சலனமுறுகிறதா? என்று பார்த்தேன்." அதைக் கேட்டதும் அவளுக்கு அழுவதா? சிரிப்பதா? என்று புரியவில்லை, "எவ்வளவு நாள் இப்படி இருக்க முடியும் ஹேமா? ரம்ய மயமான இந்த வேளையில்என் மனம் குதூஹலமடைகிறது. நீ என்ன சொல்லுகிருய்?" என்பது போல், கேட்பான் என்று எதிர்பார்த்தவளுக்கு இப்பால் எவ்வளவு ஏமாற்றமளித்திருக்கும், "ஏமாற்றத்தைக் காண்பித்துக் கொள்ளாமல், "பரீக்ஷையின் முடிவு?"

"வெற்றி. என் மனம் யாதொரு மாறுதலையுமடையவில்லை" என்று வாய் சொல்லிற்றே தவிர மனம் தாபத்தையடைந்தது.

"சந்தோஷம்" என்று சொல்லிவிட்டு அசாதாரணமாகக் குழந்தையை எடுத்துக் கொண்டு திரும்பினுள்.

"என்ன அவசரம் சற்று உட்காரேன். நேரம் மிக்க மனேரம்யமாக இருக்கிறது. சற்று நேரம் பேசிக் கொண்டிருக்கலாம்"

"இப்பொழுது உங்களுக்குத் தனிமை தான் நன்மை தரும்." என்று சொல்லிக் கொண்டே அவன் பதிலுக்குக் காத்திராமல் சென்றுவிட்டாள்.

"சாட்டையினுல் பளீரென அடித்தது போன்ற உணர்ச்சி ஊட்டியது அவள் பதில், "நான் உன் மனம் பலவீனமுற்ற இந்த நிலைமையில் இவ்விடமிருந்தால் உன் லக்ஷ்யம் என்னுகும்? என் ஒத்துழைப்பின்றி உன் லக்ஷ்யம் கை கூடாது?" என்று சொல்லிச் சவால் விடுவது போலிருந்தது.

இது நடந்த மூன்ருவது நாள், வழக்கம்போல் குழந்தையை எடுக்க வந்தால்...கட்டிலின் பக்கத்தில் விட்டுக்கொண்டு படுத்திருந்தான் ராஜா, குழந்தை சுவர் பக்கமாக இருந்தபடியினுல் இவள் பக்கத்தில் நின்றபடி அவன் மார்பின் மீது அசாதாரணமாகச் சாய்ந்து குழந்தையை எடுத்துக் கொண்டாள்.

"அப்படி அவள் செய்தது அவன் மனதைப் புல்லரிக்கச் செய்துவிட்டது, அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் "இது என்ன?" என்ருன்.

"எது?" என்ருள் பதில்.

"எதுவா? கூச்சமில்லாமல் மேலே விழுந்து எடுத்தாயே அது?"

"அதனுலென்ன?"

"யாராவது பார்த்தால்?"

"பார்த்தாலென்ன? அன்றே நீங்கள் என்ன சொல்லியிருக்கிறீர்கள்? நாமிருவரும் ஆண்பிள்ளைகள். நண்பர்கள்மாதிரிபழகவேண்டும் என்று. அப்படியானால் இப்படிச் செய்ததில் தவறென்ன. மேலும் அன்று பரீக்ஷை வேறுசெய்து வெற்றி கண்டாய்விட்டது. அதனால்தான் இந்தத் தைரியம் ஏற்பட்டது" என்றாள் சிரித்தவாறே.



பதிலுக்கு அவளை ஊடுருவிப் பார்ப்பதைத் தவிர வேறொன்றும் சொல்லத் தோன்றவில்லை.

அவளும் அவன் கண்களையே உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். கண்கள் அநேக விஷயங்கள் தெரிவித்தாலும் வெளிக்கு அவைகளை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை அவர்கள். அந்த நிலைமையை நீடிக்கவிட மனமில்லாதவளாக "ஒரு விஷயம் உங்களிடம் சொல்லவேண்டும். தூக்கம் வருவதாக இருந்தால் அதைக் கெடுத்துக்கொள்ள வேண்டாம்" என்றாள்.

"தூக்கமா? என்னைப் பார்த்தால் அப்படியா தோன்றுகிறது. தினமும் கொஞ்சநேரம் பேசிக் கொண்டிருக்க வேண்டுமென்பதுதான் என் விருப்பம். ஆனால் தினம் ஓரிடத்தில் நடனமாடிக் கொண்டிருக்கும் உன்னைச் சிரமப்படுத்தக் கூடாது என்றே அந்த ஆவலை வெளியிடவில்லை. இன்று நீயே கேட்பதானது என் மனதிற்குப் பாலைவனத்தில் சுனை நீரைக் காண்பது போலிருக்கிறது. குழந்தையைச் சுமந்து கொண்டு பேசவேண்டாம். இப்படி என் பக்கத்தில் விடு" என்று சுவர்புறம் நகர்ந்துகொண்டு இடம்விட்டான். குழந்தையை விட்டுவிட்டு, கட்டிலுக்கருகில் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்துகொண்டு, இரண்டு கைகளையும் மடித்துக் கட்டிலின்மீது ஊன்றியவண்ணம் சாய்ந்துகொண்டாள்.

அவனும் இவள் பக்கம் திரும்பி, கையில் தலையைத் தாங்கி. குழந்தையை ஒரு கையால் அணைத்த வண்ணம் "என்ன விஷயம் சொல்லு" என்றான்.

"பாயியின் பேச்சு நடத்தை எல்லாமே என் மனதிற்கு ஒரு மாதிரியாகப்படுகிறது."

"யாரு?"

"அவன்தான் மூர்த்தி"

"சே, அவனைப்பற்றி இவ்விதம் நினைப்பது தவறு ஹேமா. குணவீனனை நட்டுவனார் சேர்க்க மாட்டார். தாய் தந்தையரை அதி பால்யத்தில் ......இழந்த மூர்த்தியை இவரேதான் வளர்த்து வந்தார். படித்துமிருக்கிறான். அவன் ஒரு B A. என்பது நீ அறியாத விஷயமா? மாசற்ற மனம் படைத்தவன். என்ன இனிமையான சாரீரம்.? உன் நடனத்திற்கு அவன் பாடும்படி நட்டுவனார் ஏற்பாடு செய்தது எவ்வளவு பொருத்தம். உன் ஆடலும் அவன் பாடலும் மனதிற்கு எவ்வளவு இன்பத்தை அளிக்கின்றன! தம்மை மறந்து ஈடுபடுகிறார்கள் யாவரும். ஐந்து வருஷத்திற்கு முன்னால், இவன் நம்ம குலமாக இருந்தால், உங்கள் இருவருக்கும் மண முடிந்து என்னருகில் வைத்துக்கொண்டால் என்ன? என்றுகூட நினைத்ததுண்டு" என்று நிறுத்தினான்.

"எப்பொழுது அந்த எண்ணம் மாறிற்று?" என்று இடை மறித்தாள்.

சற்று நேரம் அவளை உற்றுப் பார்த்துவிட்டு, "ஏனிந்தக் கேள்வி?" என்றான்.

"நீங்கள்தானே கேள்விக்கு இடம் ஏற்படுத்தினீர்கள்?" என்றாள் சிரித்தவாறு.

"சரி. எப்பொழுதோ மாற்றிக்கொண்டேன். அதைப்பற்றி இப்பொழுது அவசியமில்லையே. விஷயத்திற்கு வா."

"நீங்கள் முடிக்கவில்லையே?"

"என்ன சொல்லுகிறது? அவன் நல்ல குணவான். உன்னிடம் சகோதர வாத்ஸல்யம் கொண்டே ஸ்வாதீனமாக நடந்துகொள்ளுவான். நம்மவர்களுக்கே இது ஒரு கெட்ட பழக்கம், ஒரு ஆண்பிள்ளை ஒரு பெண்ணினிடம் அன்பாகப் பேசினால் தப்பிதமாக எடுத்துக்கொள்ளுவது.

இதுதான் சமூகம் செய்துவரும், மக்கள் முன்னேற வொட்டாத பெருந்தொண்டு. நீயும் அத்தொண்டில் பங்கு பெறுகிருய்போலிருக்கிறது."

"அதிலெல்லாம் பங்குபெற எனக்கு அவகாசமெங்கே? உங்கள் லக்ஷயத் தொண்டில் பெற்ற பங்கைச் சரிவர நிறைவேற்றிஞல் போதாதா? ஒரேவார்த்தையில் நான் இருக்கும் திக்கைக்கூடத் திரும்பிப்பார்க்காமலிருக்கும்படி செய்துவிடுவேன். உங்கள் மனதைத் தெரிந்துகொண்டபிறகு அந்தக் கைங்கரியத்தைச் செய்யலாமென்றுதான் கேட்கவந்தேன். இனிமேல், அவனைத் தடைசெய்யாமல் சகஜபாவமாகவே நடந்துகொள்ளுவேன். ஆனல் ஓர் எச்சரிக்கை. சகஜபாவமாகப் பேசுவதென்றால், சர்வ ஸ்வாதீனம் உண்டாய்விடும். சிலசமயம் பிறர் கண்களுக்கு அசம்பாவிதமாகத் தோன்றலாம். பிறரைப்பற்றி அக்கரையில்லை எனக்கு. நீங்களே தப்பிதமாக நினைத்துவிட்டால் என்கதி என்னவாகும்?"

"என்னவாகும்? சந்தேகத்தை நடத்தையில் தீர்த்துவிட ஏற்பாடுசெய்துவிடுவேன். அவ்வளவே."

"நான் என்ன பொம்மையா, உங்கள் இஷ்டப்படி விநியோகம் பண்ண? நான் சொல்லுவதைப் புரிந்துகொண்டு பேசுங்கள். அவன் எத்தனை ஜன்மமெடுத்தாலும் என்மனதில் இடம்பெறமுடியாது. நான் செய்யாத ஒரு விஷயத்திற்காகத் தண்டனை கிடைப்பதென்ருல், நான் லேசில் விட்டுவிடமாட்டேன். உங்களுடைய தொடர்பே அற்றாலும் சரியென்ற நிலைமைக்கு வந்துவிடும் என் மனம். பெண்மையைத் தாக்கிப் பேசுவது என்பது கிளியினிடம் கொஞ்சுவதுபோலல்ல; சர்ப்பத்தை முத்தமிடுவது போன்றது." என்று சிரித்தவாறே கூறினள்.

"பலே. ரொம்ப நன்ருகப் பேசுகிருயே. சுற்றுப் பிரயாணம் ஏற்பட்டதும் ஒரு நன்மைக்குத்தான். என்னுடன் பேசுவதற்கே பயந்துகொண்டிருக்கும் ஹேமா என்னுடன் வாதம் பண்ணத் துணிந்துவிட்டாள் என்ருல் பார்க்கவி கோஷ்டியாருக்கு என் நன்றி. பாயி என்று கூப்பிடுவதற்கொப்ப,சகோதரனில்லாத உனக்குஓர்சகோதரன் கிடைத்தானென்று நினைத்து நடந்துகொள்ளு. உன் பெண்மையைத் தாக்கிப்பேசும் முரடனல்ல ஹேமா நான்" என்று குழந்தையை அணைத்த கைக்குப் பக்கத்தில் மடித்துவைத்திருந்த இரு மணிக்கட்டுகளையும் சேர்த்துப் பிடித்தவண்ணம் கூறினன்.

"நீங்கள் பேசமாட்டீர்கள். ஆனுலும் காலமும் சூழ்நிலையும் பேசும்படியான சந்தர்ப்பத்தை உண்டாக்கலாம். அந்தச் சமயம் என்னுடைய இந்த எச்சரிக்கையை நினைப்பூட்டிக்கொள்ள வேண்டும்" என்று சிரித்தவாறே கூறினள்.

"உத்தரவு தேவி" என்றுன் கைப்பிடி இறுகத் தொடங்கிற்று.

"தேவரின் இரண்டாவது பரீக்ஷயா இது?" என்றுள் சிரித்தவாறு.

"சும்மா பரீக்ஷை வைப்பார்களா? உருண்டு திரண்ட உன் கைகளைப் பார்த்ததும் பரதநாட்டியம் உடலுக்கு உறுதி அழகு இரண்டையும் கொடுப்பது என்ற விஷயம் எவ்வளவு உண்மை என்று தோன்றினது. ஸ்பர்சத்திற்கு மிருது வளிக்கிறதா என்று பார்த்தேன். ஆஹா! அழகை மிஞ்சுகிறது குளிர்ச்சி. நீ சாதாரணப் பெண்ணல்ல; தெய்வாம்சம்பெற்றவள். புஷ்பம் போன்ற மிருதுத்தன்மையுடன் இன்பமயமான குளிர்ச்சி பொருந்தியவை" என்று நிறுத்தினன்.

"பாராட்டுதலுக்கு நன்றி. கையைவிடுங்கள். உங்கள் லக்ஷயமும் குளிர்ந்துவிடப்போகிறது" என்று சொல்லியவண்ணம் பலவந்தமாக அவன் கையை எடுத்து அவன் மார்புமீது வைத்துவிட்டு, சட்டெனக் குழந்தையை எடுத்துக்கொண்டு அமைதியுடன்"உறக்கம் உங்கள்கண்களை தழுவட்டும்" என்று சொல்லிவிட்டுப் பதிலுக்குக் காத்திராமல் சென்றுவிட்டாள்.

"இது இரண்டாவது சவுக்கடி" என்றது அவன் மனம். அவள் மனம் தெரிந்து வேண்டுமென்று கையைப்பிடிக்கவில்லை. பேச்சுவாக்கில், அவனையுமறியாமல் கையைப் பற்றிவிட்டான். அவள் கேள்விக்குப்பின்புதான் நிலைமையை உணர்ந்தான். அசட்டுத்தனத்திலிருந்து தப்பித்துக்கொள்ள, இவ்விதம் கூறினன் யோசிக்காமல். அவள் செல்லுவதைத் தடுக்கவேண்டுமென்று தோன்றினது. செய்கையில் காட்ட முடியவில்லை. அவள் சென்ற பின்பே சிந்தனையிலீடுபட்டது மனம். அவள்ஒத்துழைப்பு இல்லாவிடில் தனது லக்ஷயம் ஆடிக்காற்றின் பஞ்சின் நிலைமைதான்.இன்று மனமிருந்தநிலைமையில், இன்னும் சற்றுநேரம் அப்படியே இருந்தால், என்ன ஆகியிருக்கும்? நினைத்துப் பார்க்க அவன் மனம் மிக்க லஜ்ஜையுற்றது. அப்படியே இருந்தாலும் என்னவாம்? யாவரும் விரும்பும் விஷயம்தானே? அவளும் தடுத்திருக்கமாட்டாள். இவ்வளவையும் ஏன் உதறித்தள்ள வேண்டும்? "உனது அசட்டுக் கொள்கை" என்றது ஒரு மனம். "அசட்டுக் கொள்கையா? மனிதனின் ஆத்மசக்தி எத்தகையது என்பதை நிரூபிக்கும் தீவிரக் கொள்கை. இப்படித் தடுமாறுவது இயற்கை. ஆனல் அதில் வெற்றி காண்பதுதான் லக்ஷயம்" என்ற சமாதானம் கூறியது ஒருமனம். இந்தவித சிந்தனையில் எப்பொழுது தூங்கினன் என்பது அவனுக்கே தெரியாது.

7

தனது சக்தியில் நம்பிக்கை ஏற்பட்டதும், அவன் மனம் சலனமடைந்து தவிப்பதை, அவன் மீதுள்ள அளவற்ற அன்பானது நீடிக்க

விட விரும்பவில்லை. அவன் நிலைமை அவள் மனதில் பரிதாபத்தை உண்டாக்கினது. அவன் எந்த விதமான விஷயத்தை மனதில் வைத்துக்கொண்டு தன்னையும் வருத்தி, அவனும் மனச்சாக்ஷியைக் கொன்று கொண்டு இருக்கிறான்? என்ற அறியமுடியவில்லையே யென்று தனிமையில் வருந்துவாள். எதுவானுலென்ன? அவன் விருப்பத்திற்கு மாறுபடா வண்ணம், நடப்பது தனது கடமையென்றும், அதனால் எந்தவிதமான இடைஞ்சல் வந்தாலும் சமாளித்துக்கொள்ள வேண்டியது என்ற முடிவிற்கு வந்தவளாக, அவனது லக்ஷ்யத்திற்கு மிக மிக அனுசரணையாகவே நடக்கலானாள். இதனால், ராஜாவிற்கு எந்த ஒரு சிறுவிஷயங்கூட ஹேமாவிடம் சொல்லாமல் செய்வது என்பது அவனது சக்திக்கு அப்பாற்பட்ட விஷயமாகப் போய்விட்டது. ஹேமாவைக் கலந்து யோசித்தபின்பே தாயாரிடம் கூடச் சொல்லுவது என்பது பழக்கமாகிவிட்டது.

இந்த விஷயத்தில் பங்குபெற்றான் மூர்த்தி. மூர்த்தியைப்பற்றி ராஜாவினிடம் ஹேமா சொன்ன மறுதினம், இரவு மேல்மாடியில் நிலவில், ஹேமாவும் ராஜாவும் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, அடுத்த ஊர் புரோகிராம்பற்றி நட்டுவனார் கேட்டுக்கொண்டு வரச்சொன்னதாக அவ்விடம் வந்தான் மூர்த்தி. வந்த விஷயம் பேசி முடிந்ததும், அவனைப் போகவொட்டாமல் உலக விஷயங்களைப் பற்றிய பேச்சில் அவனையும் கலந்து கொள்ளும்படி செய்தான் ராஜா. அவன் விடைபெற்றுச் செல்லும் பொழுது,

“ஹேமா, இன்று நம்முடன் மூர்த்தியும் கலந்துகொண்டதானது, உற்சாகமாக இருந்ததல்லவா? தினமும், இந்த விஷயங்களைப் பற்றி முடிவு செய்ய இந்த இடத்தையும் இந்த நேரத்தையும் தேர்ந்தெடுக்கலாமல்லவா?” என்றான்.

“நேரத்தை வேண்டுமானுல் கடைப்பிடிக்கலாம். இடத்தைப் போகுமிடங்களுக்குப் பெயர்த்துக் கொண்டு போக முடியாதே” என்று சிரித்தாள்.

“நாம் போகுமிடங்களில் நமக்கென்று ஒரு அறை இருக்கத் தானே செய்யும். அந்த இடத்தில் மூவரும் கூடிப் பேசலாம். என்ன மூர்த்தி உனக்கு ஆக்ஷேபணையில்லையே?”

“இப்படிப்பட்ட சந்தர்ப்பம் அளிப்பதற்காக உங்களுக்கு நன்றி கூறவேண்டும்” என்றான்.

அவன் சென்றதும் “நம் குடும்ப விஷயங்கள் கூட அவனுடன் கலந்து தான் பேசவேண்டுமா?” என்றாள் ஹேமா.

“அப்படியானால் இந்த வேளையில் நம்முடன் அவன் கலந்து கொள்ள வர உனக்கு விருப்பமில்லையா? நமது சொந்த விஷயம் பேசுவதற்கு எவ்வளவோ சந்தர்ப்பங்களை நாம் ஏற்படுத்திக் கொள்ள முடியும். அவன் வருவதற்கு முன்போ, அல்லது அவன் போன பின்போ பேசலாம். அல்லது மத்யானமே பேசலாம். ஆனால் அவன் வருவது பிடிக்கவில்லை யென்றால் வேண்டாம்.”

“உங்கள் சந்தோஷம் தான் என் சந்தோஷம். அவன் வருவதுபற்றி யாதொரு ஆக்ஷேபமுமில்லை. பிரைவேட் செகரெட்டரியாக்க வேண்டாமென்று நினைத்தேன். அவ்வளவு தான். அவன் வருகை, நமது தனிமையின் பயங்கரத்திலிருந்து தப்ப உதவியளிக்கும்” என்று சொல்லியவாறு பதிலுக்குக் காத்திராமல் சென்றுவிட்டாள்.

"தனிமையின் பயங்கரம்!" இந்த வார்த்தை வெறுப்பா? தாபமா? நாம் தவறுவதை அவள் எப்படி வரவேற்கிறாள்? பேச்சு பார்வை, செய்கை யாவும் ஒரே நிதானத்திலிருக்கின்றன. அப்பா! மனதை அறியவே முடியவில்லை, போகப் போகப் பார்க்கலாம்'' என்று நினைத்த வண்ணம் படுக்கைக்குச் சென்றான்.

ஓரிடத்தில் ஹேமாவின் நடனம் பார்க்க, ஒரு சினிமா டைரக்டரும், படாதிபதியும் வந்தார்கள். அதன் விளைவு, அவர்கள் எடுக்கும் படத்தில் ஹேமாவின் நடனத்தைச் சேர்க்க விரும்புவதாகச் சொன்னார்கள். முதலில் ராஜா சற்றுத் தயங்கினான். மூர்த்தி தைரிய மூட்டினான்.

"இதிலென்ன தவறு? படத்தில் நடனம், நீங்கள் புகழை விரும்பவில்லையானாலும், அற்புத நடனத்தை, படத்திலென்றால் பாமர மக்களும் பார்த்துக் களி கூரமுடியும். அதுவும் ஒரு சமூகத் தொண்டல்லவா? அதில் வரும் ஊதியத்தை, நட்டுவனார் கலாமண்டபம் ஏற்படுத்தச் சேர்க்கும் பண்டிற்குக் கொடுத்துவிட்டால் போகிறது. குருவிற்குச் சிஷ்யையின் சேவையாகும்” என்றெல்லாம் சொல்லவே, ராஜா, ஹேமா, இருவருக்குமே சபலம் தோன்றிவிட்டது. வேண்டாமென்ற தாயாரை இருவரும் சேர்ந்து குழையடித்துச் சம்மதிக்கச் செய்துவிட்டார்கள். இதனாலேனும் மகன் மனம் மாறி, மணத்தை நிறைவேற்றுவானோ” என்ற ஆசையில் சம்மதமளித்து விட்டாள்.

சுற்றுப்பிரயாணத்தின் நடுநடுவே படப்பிடிப்பும் நடந்துவந்தது. சுற்றுப் பிரயாணம் முடிந்து ஊருக்கு வந்ததும் இவர்களைப் பார்க்கச் சிவஸ்வாமி வந்தான். முக்கியமான கேஸ் ஒன்று அன்று நடத்த வேண்டியிருந்ததினால் ஆபீஸ் அறையில் கக்ஷிக்காரர்களுடன் பேசிக்கொண்டிருந்த ராஜா சிவஸ்வாமியை வரவேற்றானே தவிர அவர்கள் பழக்கப்படி பேச முடிய வில்லை. சாப்பிடும் பொழுது ஏதோ நடனத்தைப் பற்றியும் படப்பிடிப்புப் பற்றியும் பேசினார்கள். இவன் லக்ஷ்யம் எந்த மட்டிவிருக்கிறது. என்று கேட்கவேண்டுமென்ற துடிப்பு மனதிலிருந்தாலும் சந்தர்ப்பம் சரியாக வில்லை யென்பதற்காகக் காத்திருந்தான். சாப்பிட்டு வந்தவர்கள் டிரஸ்ஸிங் அறையில் சென்றார்கள்.

"சிவா, இன்று ஒரு முக்கியமான கேஸ். படே பேர்வழிக்கு எதிர்கக்ஷியாக வாதாடப்போகிறேன். வெற்றி கிடைத்ததோ? இதைவிட அதிசயமான விஷயம் வேறொன்றும் இருக்க முடியாது. நமக்குள் பேசவேண்டிய விஷயம் ரொம்ப இருக்கிறது. சற்று நேரம் தூங்கு. நான்கு மணிக்குள் வந்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டு ட்ரஸ் பீரோ அருகில் சென்றான் ராஜா. கொஞ்சம் தள்ளிப் போடப்பட்டிருந்த சாய்மான நாற்காலியில் சாய்ந்துகொண்டான் சிவஸ்வாமி. அதாவது ட்ரஸ் பீரோ சிவஸ்வாமிக்கு முதுகுப்புறமிருந்தது. ட்ரஸ்பீரோவிற்குப் பக்கத்தில் நின்றால் சிவஸ்வாமி படுத்திருப்பது தெரியாது. சிவஸ்வாமிக்கெதிரில் சுவரில் ஒரு கண்ணாடிமாட்டியிருந்தது, அதில் ட்ரஸ்பீரோவின் பக்கத்தில் நடக்கும் விஷயங்கள். சினிமா' படம் போல் தென்பட்டன அவனுக்கு.

ட்ரஸ் பீரோவைத் திறந்தவன் எதையோ தேடிவிட்டு "ஹேமா, ஹேமா" வென்று கத்தினான்.

"நீங்கள் கூப்பிடுவீர்கள் என்றுதானே வந்து கொண்டிருக்கிறேன். சத்தம் போடுவானேன்?" என்று கேட்டுக்கொண்டே வந்த ஹேமா, எதையோ அவன் கையில் கொடுத்தாள். சிவஸ்வாமி கண்ணாடியைக் கவனிக்கலானான். கொடுத்ததை வாயில் போட்டுக்கொண்டு, சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, பீரோவில் துணி எடுத்துக்கொண்டிருந்த ஹேமாவின் முதுகுப்புறம் தொங்கும் தலைப்பையெடுத்து கையையும் துடைத்து வாயையும் துடைத்துக்கொண்டு, அவள் தோளுக்குமேலாகத் தலையை நீட்டி அவள் எடுக்கச் சிரமப்பட்டுக் கொண்டிருக்கும், சட்டையை எடுத்தான்.

"எல்லாம் தயாராக எடுத்து மாட்டிவைத்திருப்பதை எடுத்துக்கொள்ளமுடியாமல் இப்படி ஏன் சத்தம் போட்டீர்கள்?" என்றாள் சிரித்தவாறு.

"நான் என்ன செய்யட்டும்? அப்படிப் பழக்கமாகிவிட்டது. நீ பக்கத்திலில்லாவிட்டால் ஒன்றுமே ஓட மாட்டேனென்கிறது. அது உன்னாலா? என்னாலா? என்பது தான் புரியவில்லை" என்று சொல்லியவாறு அவள் கொடுத்த உடுப்புக்களைக் கையில் வாங்கிக் கொண்டான்.

"வெள்ளிக்கிழமை பூஜைக்குக்கூடப் போகாமல் இது தெரிந்து தான் ஸ்னானம் செய்யாமல் நின்றேன். அம்மா பூஜையறையிலிருக்கிறார், நான் போகட்டுமா? எல்லாம் அதிலிருக்கிறது. அந்த ஸ்டாண்டில் டை, இருக்கிறது" என்றாள்.

"கொஞ்சம் இரு. நான் போன பிற்பாடு பூஜைக்குப் போனால் போதும். மூர்த்தி வந்ததும், பாங்கிலிருந்து பணம் எடுத்து வரச் சொல்லு. செக்கில் கையெழுத்துப் போட்டு வைத்திருக்கிறேன். டாக்டர் பில், வேலைக்காரர்கள் சம்பளம் யாவற்றையும் பட்டுவாடா செய்துவிடு."

"பாங்கிலிருந்து எடுப்பானேன்? இன்று சாயங்காலம் வரப் போகும் பணத்தைக் கொடுத்தால் போதாதா?"

"அது வேறு செலவிற்கு வேண்டும்."

"அப்படி என்ன செலவு?"

"அதைப்பற்றிப் பிறகு சொல்லுகிறேன்" இப்பொழுது நான் சொன்னபடி செய்."

"முடியாது. என்னவென்று சொன்னால்தான் ஆச்சு. அப்படியென்ன ரகசியச் செலவு?

"ஆம், என்னுடைய ரகசியச் செலவின் விபரங்களைச் சொல்லுகிறேன் கேள் ........" என்பதை இடமறித்து,

"குதர்க்கம் வேண்டாம். அம்மாவுக்கு நான் பதில் சொல்ல வேண்டும். ஒரு பொய் சொல்லிவிட்டு விழித்துக் கொண்டிருக்கிறேன்."

"அதே விஷயத்திற்குத் தான். ஒரு பெரிய நோட் கொடுத்து விட்டால் சரியாகப் போய்விடுகிறது. அதனால் பாங்கிலிருந்து எடுப்பதுகூடத் தெரிவிக்க வேண்டாம், என்ன நான் சொல்வது புரிகின்றதா?"

"நன்றாகப் புரிந்தது. இந்த நாடகம் எப்பொழுது முடியப் போகிறது?"

"ஆய்விட்டது. கடைசிஸீன் தான் நடந்து கொண்டிருக்கிறது. ஒரு மாதத்தில் மங்களம் பாடி விடலாம்." என்று சொல்லியவாறு ஷர்ட்டை மாட்டிக் கொண்டான்.

"ஒரு பொய்யை மறைக்க மூன்று பொய், உங்கள் சித்தம் சிவன் போக்கு. சரி, டிரஸ் செய்து கொள்ளுங்கள். இதோ வருகிறேன்" என்று சொல்லிவிட்டு வெளியே சென்றுவிட்டாள்.

உடுத்துக்கொண்டு சிவஸ்வாமியின் பக்கம் வந்தவன், "சிவா, நான் வரட்டுமா" என்று கேட்டுவிட்டு, 'ஹேமா!' வென்ற கூப்பிட்டான். கையில் ஒரு டம்ளர் ஜலத்துடன் வந்தவள் ஜலத்தைக் கொடுத்துவிட்டு, ஒரு சிறிய தட்டை நீட்டி, "அம்மா பாதி ஜபத்திருப்பதால் வரமுடியவில்லை. இதைக் கொடுக்கச் சொன்னார்" என்றாள்.

"வழக்கம் போல" என்று முடிக்குமுன், அவளை எரித்துவிடுவதுபோல் நிமிர்ந்து பார்த்தான். சட்டெனத் தட்டிலிருந்த குங்குமத்தை விரலால் தொட்டுப் புருவத்தின் மத்தியில் வைத்துக்கொண்டு, "நான் வரட்டுமா?" என்றான். சிவஸ்வாமி தலையை அசைக்கவே புறப்பட்டான். சிவஸ்வாமி பக்கமாகத் தட்டை நீட்டினாள். அவன் குங்குமம் எடுத்துக்கொண்டபின், ராஜாவைப் பின் தொடர்ந்தான். அடுத்த ஹாலில் நின்றபடி "அம்மா வரட்டுமா?" என்றான் ராஜா.

சரி, யென்று பதில் சொன்னபின்புதான் போய் காரில் ஏறிக்கொண்டான். வண்டி புறப்பட்ட பின்பே உள்ளே சென்றாள் ஹேமா.

(தொடரும்)

# பட்டணம் பார்!

ஆர். பி. அய்யங்கார்

அடி அதங்கிய அண்டா, நிலைகொள்ளாத வாளி, நசுங்கிப்போன நான் கைந்து தகரக்குவளைகள், விரிசல்கள் கண்ட மரப் பிப்பாய்—இவற்றையெல்லாம் கட்டாந் தரையில் ஒன்ருகச் சேர்த்து உருட்டுங்கள். எதற்கு என்கிறீர்களா? மவுண்ட்ரோடு ரவுண்ட்டாணு நடுவே நிற்பதைப்போன்ற பிரமையோ, பெருமையோ உங்களுக்கும் ஏற்படத்தான். ட்ராம்களின் 'லொட லொடா' சத்தம், கார், பஸ்களின் 'ஹாரன்' அலறல், லாரிகளின் டயர் ஓசை, மோட்டார் ஸைகிள்களின் 'பட் படார்,' ஆட்டோ ரிக்ஷாக்களின் 'சடபுடா,' 'ஓரம், ஓரம்' என ரிக்ஷாக்காரர்களின் கூச்சல், ஸைகிள்களின் 'கிண்கிணி' நாதம் எல்லாமாக இழையக் கிளம்பிவிட்டால் கேட்கவே வேண்டாம்! ஆழப் பஞ்சு அடைத்துக்கொண்டாலும் காதுகளைப் பதம்பார்க்காமல் போகாது. கிராமத்தை நோக்கி ஓடிவிடலாமென்றுகூடக் கால்கள் நமக்குத் துடிக்கும். ஆனுல் பட்டணமாச்சே; ஓடினுல் நாகரிக நகரத்தார் பட்டிக்காட்டு ஜனங்கள் 'ப்ளேனை' காண்பதுபோல வைத்த கண் வாங்காது வெறிக்க, வெறிக்கக் கூடி நின்று விழிப்பார்கள். அதற்கு அனுவசியமாக இடம் வைப்பானேன்? ஊரோடு ஒத்து வாழ்வது மேலல்லவா!

நாலு ரோடு கூடும் இப்பேர்ப்பட்ட சந்தடியான இடத்தைச்சுற்றித் தென்னுட்டின் தலை சிறந்த தினசரிப் பத்திரிகைகள் காரியாலயம் அமைத்துக்கொண்டிருப்பது ஆச்சரியமே. பேப்பர் ஆபீஸ்களுக்குப் பெயர் பெற்றது லண்டன் 'ப்ளீட் ஸ்ட்ரீட்'. அப்படியே சென்னைக்கு மவுண்ட்ரோடு. அடக்கமான கட்டிடங்கள்தான்; ஆனுல் மிடுக்குடன் மிளிர்கின்றன, பத்திரிகைகளின் பிராபல்யத்தினுல். வாயு வேகம், மனோ வேகம் என்பார்களே! அந்தப் படியே நடக்கிறது அங்கேயெல்லாம் வேலை.

வெளியிலோ பேரிரைச்சல். உள்ளேயோ டெலிபோன்களின் 'கிர்ரிங், கிர்ரிங்' கூவல், டெலி பிரிண்டர்களின் குதிநடை. க்ஷணத்துக்கு க்ஷணம் உலகச் செய்திகளை சேகரித்து 'ஹனுமார் வால் வளர்ந்த கதை'யாக டெலி பிரிண்டர்கள் எக்கித் தள்ளிக்கொண்டிருக்கும். செக்கில் பூட்டிய மாடுகளைப் (உழைப்பையே குறிப்பிடுகிறேன்) போல உதவி ஆசிரியர்கள் ஓய்வு ஒழிவின்றி, வந்த தந்திகளைச் சுறுசுறுப்பாகவும், சாமர்த்தியமாகவும் குறுக்கி நிமிர்த்தி குடைந்து பிழிந்து, மக்கள் கவனத்தைக் கவரும் வகையில் பத்திரிகைகளில் திணிக்கப்படும் அவஸ்தையுண்டே அதைநேரில் பார்த்தாலொழியப் புரியாது. சுருங்கச் சொல்லின் பிரஸவ வேதனையே?

இராப்பகலாகச் சஞ்சாரம் செய்து இரை தேடும் நிருபர்கள் பிழைப்பு இருக்கே, இன்னும் மோசம். தந்திகளோடு மன்ருடுவதோடு உதவி ஆசிரியர்களின் வேலை தீர்ந்தது. ஆனுல் வெயிலோ, மழையோ பாராமல் மூலைக்கு மூலை 'ரிபோர்ட்டர்கள்' பிரிந்து சென்று பிரமுகர், பாமரர்களுடன் பேச்சில் மல்லுக்கு நின்று, கூட்டம், வைபவங்களில் கலந்துகொண்டு, கோர்ட்டு, கோரவிபத்துகளை நேரில் பார்த்து, செய்திகளைத் திரட்டுவதற்குள் முதுகெலும்பு நெகிழ்ந்துவிடும்.

பொதுவாக, பத்திரிகையாளர்களுக்கு ஊதியம் குறைவே; உற்சாகமோ அதிகம். பணத்துக்காகப் பாடுபடுவதாகத் தோன்றவில்லை. வேலையில் காணும் இன்பத்தில் திளைத்து, தினே தினே பெருமிதம் கொள்கிருர்கள். மூலைமடை கிராமத்து முத்துமாரியம்மன் திருவிழா முதற்கொண்டு மூவல்லரசு நாடுகளின் மனப்போராட்டம் வரை சகலமும் அத்துப்படி. உலகமே தத்தம் சுண்டுவிரலில் சுழல்வதாக நினைப்பு. எதையும், எவரையும் தூக்கி எறிந்து பேசும் சுபாவம் உள்ளவரேனும் மரியாதை கொடுத்து மரியாதை வாங்குவார்கள். சம்பாஷணையில் ஓர் [illegible]தளுக்கு, உடம்பில் ஓர் பரபரப்பு, முகத்தில் ஓர் அலாதி மந்தஹாஸம், அனைவரிடமும் ஓர் அலக்ஷியப் பற்று—இத்தனையும் அவர்களிடம் காணலாம்.

உள்ளூர் விவகாரம், வெளியூர் வர்த்தமானம், உலக நடப்பு எல்லாம் நெருக்கியடித்துக்கொண்டு தினபத்திரிகைகளில் இடத்தைப்பிடிக்கத் தாவியோடும் அழகை ஒருநாள்

பூராவும் ஓர் ஆபீஸினுள் நின்று கவனித்து வியந்தேன். நிலைமைக்குத் தக்கபடி 'நியூஸ் களை'நீட்டி, குறுக்கிப் பக்கத்தை நிரப்புவதற்குள் 'உன்னைப்பிடி என்னைப்பிடி' என்றாகி விடுகிறது. மெஷினில் அகப்பட்டு, பத்திரிகை அச்சேறும் நேரம் நெருங்க, நெருங்க ஆபீஸே பம்பரம்போல் அதிவேகமாகச் சுற்றும் பிரமை எனக்கு ஏற்பட்டது. சூடுமிக்க, விறுவிறுப்புள்ள, வபையான 'நியூஸ்' ஒன்றிரண்டு கடைசி கால் மணிக்குள் பாய்ந்து வந்து பத்திரிகைக்குக் களையேற்றும். அள்ளித் தெளித்த கோலமானாலும் கட்டுக் குலையாது, தடிப்பான தலைப்புகளைத் தாங்கி, படிப்பவர்களின் பார்வையைத் தன்பக்கம் திருப்பும்.

பிரதிகள் முழு உருவோடு மெஷின் பிடியினின்று நழுவ வேண்டியதுதான் தாமதம். காத்து நிற்கும்மோட்டார் 'வான்'கள் கட்டுக் கட்டாக ஏற்றிக்கொண்டு எழும்பூர், ஸெண்ட்ரல் ஸ்டேஷன்களுக்கும், பஸ் ஸ்டாண்டுகளுக்கும் பறந்தோடும். கையேந்தலாக வேறு கூலிப்பையன்கள் பத்திரிகைகளின் பெயரைக் கூவிக்கொண்டே தெருவுக்குத்தெரு பொடி நடையில்போய், காசாக்கப் பார்ப்பார்கள். பட்டணத்தில் பத்திரிகைகளுக்கு ஒரு மணிநேரமே மவுசு; அப்புறம் பழசு, கடைகளில் 'வாங்குவாரில்லையே' என்று ஏங்கி, தற்கொலைப்கொப்பாக, 'கிளிப்பு' களில் தொங்க ஆரம்பித்துவிடும்!

பிரும்மா, விஷ்ணு, சிவன் புரியும் ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களையும் ஒருங்கே செய்கின்றன பத்திரிகைகள். முகத்துக்குக் கண்ணே பிரதானம். பத்திரிகைக்குத் தலையங்கமே கண். மக்களின் முழு ஆதரவே மூச்சு, விளம்பரங்களே வலு. நித்ய கண்டம் பூரண ஆயுசு என்றில்லாமல் நிலைத்து நின்று ஆழ வேரூன்றிய பத்திரிகைகள் நாடு சுதந்திரமடைந்ததிலிருந்து புதுத் துளிர்கள்விட்டு, பூத்துக் குலுங்குகின்றன. வெவ்வேறு பத்திரிகைகள் வெவ்வேறு விலைகளில் விற்கப்படுகின்றன. கிரயம் அணுக்களில் இருந்தாலும் விஷயகனம் விள்ளாது விரியாது ரூபாக்களில் சொல்லலாம்.

வேடிக்கை பார்க்கச் சென்ற ஆபீஸில் மாலை 6 மணி அடிக்கவே என் நண்பரிடம் திரும்பி, 'என்ன சப்-எடிட்டர் ஸார், வீட்டுக்குக் கிளம்பலையா?' என்றேன். 'பேப்பரே பிரிண்டாகி வெளியிலே வந்துடுத்து, கிளம்பாமெ என்ன!' என்று சொல்லிக்கொண்டே இரண்டு நிமிஷத்தில் என்னோடு அவரும் வெளியே வந்தார். 'அதோ மயிலாப்பூர் பஸ் வறது, பிடிக்கலாமே' என்று வேகமாக நடையைப் போடச் சொன்னேன். 'சே, பஸ்ஸிலே எதுக்கு? வாங்கோ ட்ராமுக்குப் போவோம்' என்றார், 'ட்ராமுக்கா?' என்றேன் ஆச்சரியம் மேலிட்டு. பஸ்லே போகாமல் காலணா, அரையணா மிச்சப்படுத்தறரோ மனுஷன் என்று சந்தேகம் தட்டியது. ஆனால் அதற்குள் அவரே 'சரர்ஜ கம் மீன்னு பார்க்கல்லே. ட்ராமிலே ஏறினதற்கப்புறம் விஷயத்தைச் சொல்றேன், வாங்கோ' என்றார்.

'நெட்டு, போல்ட்டு' எல்லாவற்றையுமே கடகடவென ஆட்டிக்கொண்டு ட்ராமும் வந்து சேர்ந்தது. இருவரும் ஏறிக்கொண்டோம். வண்டிச் சக்கரங்களும் உருள ஆரம்பித்தன. யந்திரபாகங்கள் எண்ணெய்ப் பிசினைப் பார்த்து, 'தீவளிக்கு தீவளி'யாயிருக்குமென' தோன்றியது. காவேரிப் பாலத்திலே ஓடும் கூட்ஸ் ட்ரெயின், வைரம் பாய்ந்த கருங்காலி மரத்திலே வைத்த ரம்பம் இரண்டும் விட்டு எழுப்பக்கூடிய மிஸ்ரமான ஓர் ஓசை வண்டியின் அடித்தளத்திலிருந்து குமுறி வந்து காதுகளைத் துளைத்தது. அக்குவேறு ஆணி வேறாக மேல் கூரை கழன்று தலையில் விழுந்துவிடுமோ என்றுகூட அஞ்சினேன். கடுகைப் பூசணிக்காயாக்கி சொல்வதாகக் நினைத்து விடாதீர்கள். திருப்பத்திலோ, ப்ரேக் போடும் போதோ அது 'வீ...ல்' எனக் கேட்டால் கல்மனதும் உருகும். 'விட்டு விடுங்களேன், விட்டுவிடுங்களேன் இத்தனை காலம் உழைத்தது போதாதா? ஈவு இரக்கமில்லையா?' என்று உருக்கமாகக் கேட்டதாகவே எனக்குப் பட்டது.

'பகல் பூரா உழைச்சுட்டு, ஏன்ஸார் இந்தக் கலகலத்த ட்ராம்லே ஏறினேள்?' என்றேன் நண்பரைப் பார்த்து.

'தலைவலியை விரட்டத்தான்' என்றார் ஆர அமர,

'நீங்கள்சொல்வது விசித்திரமாக இருக்கே! தலைவலியைப் போக்க இதில் போவானேன்? ஹாய்யா பஸ் சவாரி செய்தால், 'டக்' கென விட்டுடுமே.'

'புரியாமே பேசறேளே. தினமே வேகமாக, கடுமையாக உழைத்துவிட்டு வெளியே வந்

தால் மண்டை பாறைபோலக் கனத்து வலி யெடுக்கிறது. அதற்காக ட்ராம்லே ஏறி உட்கார்ந்து ஜன்னலோரமாகத் தலையைச் சாய்த்துக்கொண்டால் வண்டி ஆடுகிற ஆட்டத்திலே உள்ளூற ஒரு குறுகுறுப்பு உணர்ச்சி நெளிந்து, நெளிந்து ஓடி ஹிதத்தைக் கொடுக்கிறது. மயிலாப்பூரில் வண்டி லிட்டிறங்குகையில் தலைவலியும் வாங்கிவிடுகிறது. என் அனுபவத்தில் கண்ட உண்மை இது?"

'பலே பேஷ்! முள்ளை முள்ளால் எடுக்கக் கற்றுக்கொண்டிருக்கிறீர். வழக்கமாக வரும் வலியையும் பழக்கப்படுத்தி வழிக்குக்கொணர்ந்துவிரட்டுவது ஓர் விநோதமே. ஆனால் எனக்கென்னவோ, இப்போ லேசாகத் தலையை வலிக்கிறது' என்றேன் புன்முறுவலுடன்.

"நீங்களோ ஊருக்குப் புதிசு. அதான் வலிக்கிறது. மண்டையிடி உள்ளவர்களுக்குத்தான் இது மருந்து. இல்லாதவர்களுக்கு உபத்திரவமே. புது ட்ராம்கள் விட்டால் எனக்கு ஆபத்து. ஆட்டமில்லாத ஓட்டம் தலைவலிக்குக் கொண்டாட்டமில்லையா? உங்களுக்கு எப்படி தோணறது?'" என்று கேட்டார் அனுபவம் மிக்க நண்பர் இறங்கும் இடம் வந்ததும்.

என்னையறியாமலே 'வாஸ்தவம்' என்றது வாய்; 'ட்ராம் வாழ்க' என்றது மனம்.





# காய்கறி மாமிசம்



ரா. விசாலாக்ஷி

மழைக் காலத்தில் கிராமங்களுக்குச் சென்றால் அங்கே மேட்டு நிலங்களில் அழகிய சின்னஞ்சிறுவெண்குடைகளைப் போலக் காளான்கள் முளைத்திருப்பதைப் பார்க்கலாம். கிராமவாசிகள் இதைப் பிடுங்கி வந்து மற்றக் காய்கறிகளைப்போல் சமைத்தோ, கரண்டிகளில் இட்டு உப்பு மிளகாய் சேர்த்து வதக்கியோ அல்லது பச்சையாக நெருப்பிலிட்டுச் சுட்டோ மிகவும் பிரியமாகச் சாப்பிடுவார்கள்.

பஞ்சாப் காஷ்மீர் போன்ற பிரதேசங்களில் மலை காடுகளிலும் அவற்றையடுத்த புல்வெளிகளிலும் மழைக்காலத்தில் மற்றச் செடிகளைப் போலவே இதுவும் வனம் வனமாகவே வளர்ந்துகிடக்கும். அங்கே மக்கள் இவைகளைப் பிடுங்கி வந்து நாம் காய்கறிகளை வற்றவிடுவதுபோல் வற்றவிட்டு வைத்துக்கொண்டு வறுவலுக்கும் சாம்பாருக்கும் உபயோகிப்பார்கள். பொதுவாக நம் நாட்டில் எல்லாப் பகுதிகளிலும் கிராமமக்கள் இதை வெகுவாக விரும்பிச் சாப்பிட்டு வருகிறார்கள். வடநாட்டில் இதற்கு குமி, கும்பி, தர்த்தி பூல் (பூமி புஷ்பம்) பூபோட் (பூமி வெடிப்பு) ககன்பூல் (ஆகாய புஷ்பம்) ஆகாஷ்பூல் (ஆகாய புஷ்பம்) மதுரிகா சத்ரக் (மதுர நாய்க் குடை) சத்ரா (குடை) குகர்முதா எனப் பல பெயர்கள் வழங்குகின்றன.

### வெளிநாடுகளில்

ஆங்கிலேயர்கள் காளானை உண்ணும் வகை (Edible mushrooms) உண்ணாத வகை (Non-edible mushrooms) என இரண்டு வகையாகப் பிரித்திருக்கிறார்கள். உண்ணாத வகையை "டோட்ஸ்டூல்" (Tood-stool) அதாவது தேரை மலம் என அவர்கள் கூறுவார்கள். ஆங்கிலேயரிடையே காளான் உண்ணும் வழக்கம் பழங்காலம் தொட்டே இருந்துவருகிறது. பிரஞ்சுக்காரர்கள் காளானை "ஓரோங்கே" (Oronge) எனக் கூறுவார்கள். இவர்களுக்கு மற்ற எந்த வெள்ளையரையும்விடக் காளான்பித்து அதிகம். ஆகையால் பிரெஞ்சுமார்க்கெட்டுகளில் எல்லாம் மற்றக் காய்கறிகளைப் போல் காளானையும் காணலாம். என்ன விலை கொடுத்தும் அவர்கள் இதை வாங்கப் பின்னடைவதில்லை. நம் நாட்டுப் பஞ்சாபியர், காஷ்மீரிகளைப்போல் இவர்களும் காளானைக் காயவைத்து, வற்றலாக்கி உபயோகிப்பதுண்டு. மற்றக் காய்கறிகளைப் போல் பச்சையாக டப்பாக்களில் அடைத்தும், குழம்பாகத் தயாரித்து டப்பாக்களில் அடைத்தும் விற்பதுண்டு. இத்தொழிலால் பிரான்சுக்கு வருடம் சுமார் 2,50000 பிராங்குகள் வருமானம் கிடைக்கிறது, கி. பி. 1707ல் முதன் முதலாகச் செயற்கை முறையில் வீடுகளில் காளான் உற்பத்தி செய்யும் விதத்தைப் பிரஞ்சுக்காரர்கள்தான் கண்டு பிடித்தார்கள். இப்பொழுது அது அங்கே ஒரு பெரிய தொழிலாக வளர்ந்துவிட்டது. சாமான்களைப் பெரும் அளவில் உற்பத்தி செய்து உள்ளூர் மார்க்கெட்டுகளுக்குப் பச்சையாகவும் வெளியூர் மார்க்கெட்டுகளுக்கு டப்பாக்களில் அடைத்தும் அனுப்பும் பல பெரிய தொழிற்சாலைகள் இப்பொழுது பாரிஸ் நகரில் தொழிலாற்றி வருகின்றன. கடந்த மகா யுத்த காலத்தில் ஜெர்மானியர் பாரிசை வளைத்து முற்றுகையிட்ட போது அந்நகரில் ஏற்பட்ட காய்கறிப் பஞ்சத்தைச் சமாளிக்கக் காளான்தான் உதவியது. ஏன், ஜெர்மனியில்கூட யுத்த காலத்தில் காய்கறித் தட்டுப்பாட்டைச் சமாளிக்கக் காளான்தான் முன் நின்றது. ஜெர்மனியிலுள்ள மியுனிச் (Munich) நகரில் காளான்கள் விற்பதற்கென்றே தனியாக ஒரு கடை வீதி இருக்கிறது. அங்குள்ள கடைகளெல்லாம் காளான்கள் விற்கும் கடைகளே. உலகில் இப்படிக் காளான் கடைவீதி உள்ள ஒரே நகரம் இதுதான்.

மேல்நாட்டார் ஜப்பானைக் காளான் நாடு (Land of mushrooms) எனக்கூறுவதுண்டு. ஏனெனில் அந்நாட்டின் சீதோஷ்ண நிலை காளான் வளர்ச்சிக்கு ஏற்றதாக அமைந்திருக்கிறது. இதனால் அங்கே அவை அதிகமாக உற்பத்தியாகின்றன. ஜப்பானியரும் தங்கள் முக்கிய உணவுப் பண்டங்

களில் ஒன்றாகக் கருதி அதை மிகவும் பிரியமாகச் சாப்பிட்டு வருகிறார்கள். அவர்கள் காளானை 'ஷியி டாகே' (Shii-take) "மட்சு டாகே" (Matsu-take) 'ஷிபா டாகே" (Shiba-take) "ஹராடாகே" (Hara-take) "ஹிரா டாகே" (Hira-take) எனப் பலவிதமாகப் பெயரிட்டழைக்கிறார்கள். ஜப்பானில் மாத்திரம் காளான் வருடம் சுமார் 5000 டன் உற்பத்தியாவதாக மதிப்பிடப்படுகிறது. ஜப்பானியரைப்போலவே சீனரும், மங்கோலியரும், திபெத்தியரும் காளானை விரும்பிச் சாப்பிடுகின்றனர். திபெத்தில் முளைக்கும் காளான்கள் முறத்தளவு பெரிதாக இருக்கும். திபெத்தியர் இதை "ஓங்கலாவு" (Onglau) "யுங்கலடிகாமோ" (Yungala-tekamo) எனக் கூறுவார்கள். ஆப்பிரிக்காவில் நீக்ரோக்களும் அமெரிக்காவில் சிகப்பிந்தியரும்கூடக் காளானை விரும்பிச் சாப்பிடுகின்றனர். பொதுவாக உலகில் காளானை விரும்பிச் சாப்பிடாத மக்கள் மிக மிகக் குறைவு எனவே கூறலாம்.

## தோற்றமும் அமைப்பும்

காளான் வெளித் தோற்றத்தில் ஒரு அழகிய வெண் குடையைப் போலிருக்கும். குடையின் குச்சியைப் போன்றிருப்பதே அதன் தண்டுப் பாகம் (Stem). இத்தண்டுப் பாகத்தின் உச்சியில் தட்டைப்போல் விரிந்து காணப்படும் பாகமே குடை (Cap or pileus) எனப்படும். தண்டுப் பாகமும் குடையும் சேரும் இடத்தில் தண்டின் பாகம் சற்று உருண்டு திரண்டு காணப்படும். இதையே தண்டு முனை (Anvlus) எனக் கூறுவார்கள். குடையின் மேல்பாகம் நடுவில் சற்று உயர்ந்தும் பளபளப்பாகவுமிருக்கும். உயர்ந்துள்ள இடம் மற்ற இடங்களைவிடச் சற்று இருண்ட நிறமாக இருக்கும். குடையின் அடிப்பாகம் வரிவரியாக லேசாக விரிக்கப்பட்ட புத்தக விளிம்பைப்போன்றிருக்கும். இவ்வரிகள் தண்டும் குடையும் சேரும்பாகத்திலிருந்து குடையின் வெளி விளிம்பை நோக்கி ஓடும். இவ்வரிகளில் தான் காளான் விதைகள் (Spores) நிறைந்திருக்கின்றன. நன்றாக வளர்ந்த ஒரு காளானைப் பிடுங்கி, வரிகள் கீழ்நோக்கி இருக்கும்படி ஒரு பேப்பரில் வைத்து மூடி இருந்து, இரண்டு நாட்கள் கழித்துத் திறந்து பார்த்தால் நூற்றுக்கணக்கில் நுண்ணிய விதைகள் உதிர்ந்திருப்பதைக் காணலாம். இவ்விதைகளே காற்றில் பறந்து பற்பல இடங்களில் விழுந்து அடுத்த ஆண்டுகளில் காளான்கள் முளைக்க உதவுகின்றன. விதைகள் நிறைந்த மேற்படி வரிகளைச் செதில்கள் (Gills) எனக் கூறுவார்கள். மீன் செதில்களைப்போன்று அவை இருப்பதே இதற்குக் காரணம். தண்டுகளின் மேல் பகுதியும் பார்க்க மிகப் பளபளப்பாகவே இருக்கும். இதை ஒடித்தால் உள்ளே நுண்ணிய நார்கள் நிறைந்திருக்கும். இந் நார்களின் மூலமாகவே வேரிலிருந்து சத்துக்கள் குடையை அடைகின்றன. குடையின் அகலமும் தண்டின் நீளமும், தண்டின் கனமும், குடையின் கனமும் கிட்டத்தட்ட ஒரே அளவாக இருக்கும். குடையின் மேல் பகுதியின் நிறம் சுத்தவெள்ளை, லேசாகக் கறுப்பு, சிகப்பு அல்லது சாம்பல் நிறம் கலந்த வெள்ளையாக இருக்கும்.

## பயிர் முறை

சாதாரணமாக, புஞ்சைக் காடுகளில் இயற்கையாக முளைத்து நம் மக்களின் உணவுக்காகப்பயன்படும் காளானைத் தாவரசாஸ்திரிகள் அகாரிகஸ் கம்பஸ்ட்ரிஸ் (Agaricus compestris) எனக் கூறுவார்கள். இதை மேல் நாடுகளில் வீடுகளிலும் வெளியிடங்களிலும் பயிரிட்டு, மற்றக் காய்கறிகளைப்போல் விற்று நல்ல லாபமடைகிறார்கள். நம் நாட்டிலும் இதைப் பின்பற்றலாம். இதற்கு வேண்டிய சில விவரங்கள் இங்கே கொடுக்கிறேன்.

55—85°F உஷ்ண நிலை உள்ள திறந்த வெளிகளிலோ அல்லது அறைகளிலோ இதைப் பயிரிடலாம். இதற்கு முக்கியமாகவேண்டியது கம்போஸ்ட் (Compost) இதைத் தயாரிக்கப் பல வழிகள் உண்டு. சுருக்கமானதும் சுலபமானதுமான வழி இது தான்; மாட்டுத் தொழுவத்திலிருந்து சுத்தமாகப் பச்சைச் சாணத்தைச் சேகரிக்க வேண்டும்; பச்சைச் சாணத்தைவிடக் குதிரையின் பச்சை லத்தி சிறந்தது என மேல் நாட்டார்கள் கருதுகிறார்கள். பச்சைச் சாணமும் பச்சை லத்தியும் சமமாகக் கலந்துகொள்ளுவது நல்லது எனவும் பலர் கருதுகிறார்கள். மூன்று பங்கு பச்சைச் சாணத்தோடு ஒரு பங்கு மண் கலக்கவேண்டும், களிமண்ணோ அல்லது மணலோ இதற்கு ஆகாது. லோம் (Loam) எனப்படும் இருமண்பாடுள்ள மண்ணே இதற்கு ஏற்றது. இப்படி மண்ணும் சாணமும் கலந்து குவித்து வைக்காமல் சமமாகப் பரப்பவேண்டும். மூன்று நான்கு நாள் இப்படியே

பரப்பி இருக்கவேண்டும். ஆனால் அது கொஞ்சமும் காயாமல் அடிக்கடி தண்ணீர் தெளித்து, மேலும் கீழுமாகப் புரட்டிக் கொடுத்துக்கொண்டே இருக்கவேண்டும். அப்பொழுது அதில் உள்ள நாற்றமெல்லாம் நீங்கிவிடும்.

நான்காவது அல்லது ஐந்தாவது நாள் இப்படித் தயாரான கம்போஸ்ட்டைத் திறந்த வெளியிலோ அல்லது அறைகளிலோ கரையாகப் போடவேண்டும். ஒரே கரையாகவோ பல கரைகளாகவோ போடலாம். கரையின் அடிப் பகுதியின் அகலம் 20"–24" உச்சியின் அகலம் 6", உயரம் 12"—14" இருக்கவேண்டும். கரைக்குக்கரை 10"—12" இடைவெளி விடலாம். கம்போஸ்ட்டைத் கனமான பலகை அல்லது திமிசுக் கட்டையால் அமுக்கி, கெட்டியான கரையாகப் போடவேண்டும். கரை பொலபொலப்பாக இருக்கக்கூடாது.

இப்படி கரைபோடுவதற்கு முன்பாகவே விதைக்காளான் (Spawn) தயாரித்துக் கொள்ளவேண்டும். முன்கூறிய காளான் விதைகளைப் பரவலாகத் தூவி தண்ணீர் தெளித்துவந்தால்அது ஒருவகைப் பூஞ்சாணமாக மாறும். இவைகளை எடுத்தே கரைகளில் விதைக் காளானை நடவேண்டும்; ஒரு சதுர அடிக்கொன்றாக அரை அல்லது ஒரு அங்குல ஆழத்தில் விதைக் காளான்களைக் கரைகளில் நட்டு, கம்போஸ்ட்டால் கெட்டியாக மூடிவிடவேண்டும். இப்படி நட்டு முடித்ததும் கம்போஸ்ட் கரையை 1—$1\frac{1}{2}$ அங்குல கனத்திற்கு லோம் என்னும் இருமண்பாடுள்ள மண்சேற்றால் பூசி மூடிவிடவேண்டும். இப்படி மூடி முடிந்ததும் அதன்மேல் அரையடி கனத்திற்கு வைக்கோல்பரப்பி ஈரம் காயாமல் அதன் மீது தண்ணீர் தெளித்துவரவேண்டும். இப்படிச் செய்து வந்தால் விதைக் காளான் நட்ட நான்கிலிருந்து எட்டு வாரத்துக்குள் கரைமீது காளான்கள் அநேகமாக முளைத்துவிடும். இப்படி முளைத்ததும் கரையை உடைத்து, கம்போஸ்டை நிலத்திற்கு எருவாக இட்டுவிடவேண்டும். மறுபடியும் காளான் உற்பத்தி செய்யவேண்டுமானால் புதிதாகக் கம்போஸ்ட் தயாரித்தே உபயோகிக்கவேண்டும்.பழைய கம்போஸ்ட் ஆகாது. கரைகளும் புதிய இடங்களிலே போடவேண்டும். பழைய இடத்திலேயே போடவேண்டி யிருந்தால் அவ்விடத்தில் சுண்ணும்படித்துச் சுத்தம் செய்து காயப் போட்டுப் பிறகே கரை அமைக்கவேண்டும்.

## முதல்தர உணவு

காளானை ரசாயனப் பரிசோதனை செய்து பார்த்ததில் கீழேகண்ட விகிதப்படி அதில் உணவுச் சத்துக்கள் அடங்கி இருப்பதாகத் தெரிய வந்திருக்கிறது.

1. தண்ணீர்......................80—90%
2. புரொடீன்......................2—5%
3. கார்போஹைட்ரேட் ..................8%
4. கொழுப்பு..........................1 %
5. கால்சியம், பாஸ்பரஸ் இரும்பு முதலியவை }.........1.5%
6. வைடமின், ஏ......................சிறிது
7. வைடமின், பி......................சிறிது
8. வைடமின், சி......................சிறிது
9. வைடமின், டி......................மிகுதி

மனிதன் சாப்பிடும் எந்தக் காய்கறி, மீன், மாமிசம், முட்டை, தானியம் அல்லது எண்ணெயிலும் வைடமின் சத்துக்கள் இவ்வளவு அடங்கியில்லை. நம் உடல் நலத்துக்கு வைடமின்கள் எவ்வளவு முக்கியம் எனக் கூறத் தேவையில்லை. பிரிட்டன், அமெரிக்காபோன்ற மேல்நாடுகளில் கிடைக்கும் காளான்களைவிட நம் நாட்டுக் காளான்களில் புரொடீன், கொழுப்பு இரண்டு சத்துக்களும் அதிகமாக அடங்கியிருப்பது பரிசோதனைகளிலிருந்து தெரியவந்திருக்கிறது. இதை நாம் மற்றக் காய்கறிகளைப் போல் பலவிதமாகச் சமைத்தும் ஊறுகாய் போட்டும் சாப்பிடலாம். மிகவும் ருசியாக இருக்கும்.

ஐரோப்பியர்கள் தங்கள் தினசரி உணவில் ரொட்டியையும் மாமிசத்தையும்போலக் காளானையும் சேர்த்துக்கொள்ளவேண்டும் என அங்குள்ள டாக்டர்கள் கூறுகிறார்கள். உருளைக் கிழங்கைவிட இது எவ்வளவோ மேலானதும் சத்துள்ளதுமான உணவு. கால்சியம்,பாஸ்பரஸ், இரும்புச் சத்துக்கள் மிகுதியாக அடங்கியிருப்பதால் நோயாளிகளுக்கும் இது பெரிதும் உதவும். கிலிகோஜன் (Glycogen) என்னும் உடல்நலத்துக்கு வேண்டிய ஒரு மிக முக்கிய சத்தும் இதில் அடங்கி இருக்கிறது. இவை

மட்டுமல்ல, மாமிசத்தில் மற்ற எந்த உணவுப் பொருள்களிலும் அதிகமில்லாத அல்புமினுய்டு (Albuminoid) என்னும் ஒரு விசேஷமான சத்து அடங்கி இருக்கிறது. இச்சத்து மாமிச விருத்தி, இரத்த விருத்தி இரண்டிற்கும் மிகவும் பயன் படும். இச்சத்தைக் கருதியே ஐரோப்பியர் மாமிசத்தை அதிகமாக உணணுகிறார்கள். ஆனல் காளானிலும் அல்புமினுய்டு என்னும் இவ்விசேஷமான சத்து மிகுதியாக அடங்கி இருக்கிறது. ஆகையால் ஐரோப்பியர் காளானை, ''காய்கறி மாமிசம்'' (Vegetable meat) எனக்கூறுகிறார்கள். ருசியிலும் மாமிசத்தையே இது ஒத்திருக்கிறது என இதைச் சாப்பிடுகிறவர்கள் கூறுகிறார்கள். ஆகையால் இதற்குச் காய்கறி மாமிசம் என்னும் பெயர் முற்றிலும் பொருத்தமானதென்றே தோன்றுகிறது.

கடந்த மகா யுத்தத்துக்குப்பின் ஐரோப்பிய நாடுகளில் ஊட்டக் குறைவான உணவினல் மக்கள் உடல் நிலை கெட்டு வருகிறது. ஆகையால் இதைப் பரிகரிக்க அங்கே ''அதிக காளானைச் சாப்பிடுங்கள்'' (Eat more mushrooms) என்னும் ஒரு இயக்கம் தோன்றி இருக்கிறது. ஊட்டக் குறைவு விஷயத்தில் ஐரோப்பாவைவிட நம் நாடு மிக மிக மோசமான நிலையில் இருக்கிறது என்பது நம் எல்லோருக்கும் தெரியும். மேலும் நம் நாடு வறுமை மிகுந்தது. தங்கள் ஊட்டக் குறைவைப் போக்கத் தேவைப்படும் சத்துணவுகள் வாங்கிச் சாப்பிடப் போதிய பணவசதி பெரும்பாலான மக்களுக்குக் கிடையாது. இந்நிலையில் ஐரோப்பியரைவிட நாமே அதிகமாகக் காளான் விஷயத்தில் கவனம் செலுத்தவேண்டிய நிலையிலிருக்கிறோம் என்பது தெளிவு.





# தனுர்மாதச் சங்கு

தே. ஸ்ரீ. ரா



"டேய், உங்களுக்கு வேறே வேலையில்லையா? இப்படி நல்ல தூங்கற வேளையிலே 'பூம்' பூம்னு சங்கு ஊதிக் கெடுக்கிறாயே?..."

டாக்டர் ஸ்ரீராமமூர்த்தி தடாரென்று கதவைத் திறந்து வெளியே வந்து கர்ஜித்தார்.

மார்கழி மாதம் தினமும் தாதன் சங்கூதிக் கொண்டு போகிறான். செம்பிரம்பு என்ற கிராமம் புதுக்கோட்டை—தூத்துக்குடி மார்க்கத்தில் நம்பிகுளம் கரையிலமைந்தது. ஒரு வருஷமாகக் காயல் பட்டினம் தம்பி மரக்காயரின் பஞ்சாலையில் தொழிலாளிகள் வைத்தியராகப் பஞ்சாலை ஆஸ்பத்திரியில் வேலை பார்த்து வருகிறார் ராமமூர்த்தி. சென்னையிலிருந்து வந்தவர். அருகேயுள்ள பாண்டியநல்லூர் பண்ணையாரின் ஒரே செல்வப் புதல்வியை மணந்து பம்பாயில் வேலை பார்த்துக் கொண்டிருந்தவர். மனைவியினதும் அவள் தந்தை பண்ணையாரின் கோரிக்கைக்கும் இணங்கி, இப்பொழுது செம்பிரம்பு பஞ்சாலை டாக்டராக வேலை பார்த்து வருகிறார்.

அன்று அவர் இரண்டு குழந்தைகளும் நன்றாய்த் தூங்கிக் கொண்டிருந்தன. இரவெல்லாம் ஒரே புழுக்கம். காற்று நின்றுவிட்டது. சிறு குழந்தை அழுது கொண்டேயிருந்தது. தாமும் மனைவியும் தூங்கவேயில்லை. பின்னிரவு சற்றுக் குளிர்ந்ததும் குழந்தை அழுகை நின்றது. அது களைத்துத் தூங்கவே தாங்களும் அப்பொழுதுதான் கண்மூட ஆரம்பித்தார்கள்.

உடனே "பூம்'—பூம்!" என்று நிம்மதியைக் கிழித்து வந்தது மார்கழிமாதம் தாதன் சங்கு!

டாக்டர் ஸ்ரீராமமூர்த்திக்கு அடங்காக் கோபம்! என்ன அநியாயம்! என்ன மூடப்பழக்கம்! நல்ல தூக்கத்தைக் கெடுத்து அமர்க்களம் செய்கிறார்கள். இவன் சங்கு ஊதாமலும் அழகு பிறக்கக் கீதம் பாடாமலும்போனால் மார்கழிமாதம் போகாதோ? என்றெல்லாம் கேள்விகளை எழுப்பிக்கொண்டிருந்தது அவர் மனம். அந்தத் தாதனுக்கு அப் பஞ்சாலையில் இன்னும் காலியாயிருந்த வேலைகளில் ஒன்றைக் கொடுத்து மறுநாட் காலையிலேயே வேலைக்கு வரும்படி உத்தரவு கொடுத்துவிட்டால் இந்த விடியற்காலை உபத்திரவம் ஒழியும் என்று முடிவு கட்டினார் டாக்டர்.

* * *

தாதனோ சங்கூதிக்கொண்டே குளக்கரை வழியே அவ்வூர் கிருஷ்ணன் கோயிலடைந்தான். 'இந்த சாமி என்ன, இங்ஙனம் கூப்பாடு போடுதாக! இவுக பட்டணத்துலேந்து வந்தாக்கி நம்ம பளக்க வளக்கங்களே விட்டுடணுமாக்கம்?'' என்று அவனும் மனத்துள் கேட்

டுக்கொண்டு கோயிலைச் சுற்றிச் சங்கூதினன். அப்பொழுது அவ்வூர் தனுர் மாசப் பஜனையும் வந்துசேரவே, அவர்களுடன் பின் சென்று சங்கூதி சேமக்கலம் தட்டி, சுவாமி தரிசனஞ் செய்தான். பின்பு தீர்த்தம் உண்டு, துளசியைத் தட்டில் வாங்கிக் கொண்டு வெளி வந்து முண்டாசைக் கட்டிக் கொண்டு வீடு திரும்பினன்.

டாக்டர் பங்களாச்சுவர் வரும் வரை வழக்கம் போல் துதிபாடி க்ஷேமக்கலங் கொட்டி, சங்கூதிக்கொண்டு வந்தான்.

தாதன் திரும்பி வரும் போது அவனுடன் பேசி அன்று காலையிலேயே அவனைப் பஞ்சாலைக்கு வேலைக்காக வரச்சொல்லிவிட வேண்டுதற்காக டார்ச் லைட்டுடன் காத்திருந்தார் டாக்டர் ஸ்ரீராமமூர்த்தி. அவன் கோவில்விட்டுக் குளக்கரை வழியே வீடு திரும்புவதை அவன் சங்காநாதத்திலிருந்து தெரிந்து கொண்டார். கோபம் வர வர வளர்ந்து பெருகிற்று. ஏன் இவன் இப்படி ஓயாது ஊதி, சாந்தியைக் குலைக்கிருன்?

* * *

பனியில் நின்று கொண்டிருப்பதாக உணர்ந்தார் ஸ்ரீராம், அவன் வருவதற்குள் தலையில் ஒரு துண்டைப் போட்டுக்கொண்டு வந்துவிடலாமென்று எண்ணி உள்ளே சென்ருர். படுக்கை அறையில் இருந்தது அவர் கனமான 'டர்கி' டவல். இருட்டாயிருந்ததால் கையிலிருந்த 'டார்ச்லைட்'டைப் போட்டார்.

அவ்வளவு தான்! ஹா! என்ன இது? ஐயோ! — திடீரென்று இடி விழுந்தது போல் அப்படியே கம்பமாய் நின்று போனர்!

'டார்ச்லைட்' பிரகாசித்த காட்சி அப்படியே அவர் உடலையும் ஆவியையும் எங்கோ கொண்டு போய்விட்டது! குழந்தைகள் தூங்கும் கட்டிலின் அருகே எலக்ட்ரிக் விசிறி முக்காலியின் மேல் 'விர்ர்—' என்று ரீங்காரத்துடன் சுற்றிக் கொண்டிருக்கிறது. கட்டிலில் தொங்கிய கொசுவலை அக்காற்றில் இப்படியும் அப்படியும் ஊசலாடுகிறது. அதன் வெள்ளைக்கரை அவ்விருட்டில் இங்குமங்கும் அசைந்தாடுகிறது. அதை நோக்கிய வண்ணம் அது ஆடும்விதமாகவே, மெய் மறந்து, உயர எழுப்பிப் படமெடுத்து நாகப்பிடாரம் ஒன்று அசைந்தாடிக்கொண்டிருக்கிறது! குழந்தையின் ஒரு கை கட்டிலின் வெளியே காணப்படுகிறது. அதை மெதுவாக வீசி ஆடுகிறது வெள்ளை நாடா. அதன் நட்டுவத்திலே நாட்டமிட்டு நின்ற நாகப்பாம்பு அசைந்தாடுகிறது!

இதைக் கண்ணுற்றார் டாக்டர் ஸ்ரீராம். "ஐயோ! என்ன செய்வது! குழந்தை கை வெளியே இருக்கிறதே! கொசுவலை வீசுகிறது. பாம்பும் ஆடிக்கொண்டே கையைத் தீண்டுமோ! தடியை எடுத்து அடித்தால் அகப்படுமா? என்ன செய்வேன்? இவ்வூர் கிருஷ்ணன் கோவில் பகவானே! இக்குழந்தை இவ்வூரில் நீ அளித்த பிச்சை. கிருஷ்ண 'பரந்தாமா' என்ன செய்வேன்? கருணை நிதியே, நீயே கதி." என்று அவர் வாயும் மனமும் முணுமுணுத்தன—!

"பூம்! பூம்! பூம்—" தாதன் சங்கு நிச்சத்தத்தைப் பிளந்தது! அவ்வளவுதான். திடீரென்று சங்கு ஒலிக்கவே அடிபட்டது போல் நாகம் ஒடுங்கி, சுருங்கி, வளைந்து நிமிஷத்தில் அந்த அறையிலுள்ள சிமண்ட் நீர்குழாய் வழியாய் நுழைந்து வெளிவந்தது. நிமிஷத்தில் நீர்குழாயை இரும்புமூடியாலடைத்துவிட்டு வெளியே தொட்டியின் மூடியையும் இழுத்துச் சார்த்தின பின்பு தான் டாக்டர் ஸ்ரீராமமூர்த்திக்கு மூச்சு வந்தது!

'அப்பா பிழைத்தேன்' என்று முகத்தின் வியர்வையைத் துடைத்துக்கொண்டு 'ஸ்விட்ச்'சைப் போட்டார். விளக்குப் பிரகாசித்ததில் மனைவியும் விழித்துக்கொண்டு—,

"என்ன! ஏன், ஒருவிதமாய்ப் பார்க்கிறீர்கள்" என்று அலறிப் புடைத்து எழுந்தாள்.



டாக்டர் ஒன்றும் பேசவில்லை. முக்காலியின் மேலிருந்த விசிறியை நிறுத்தினார். கொசு வலையை அகற்றி மேலே சுருட்டினார்.

குழந்தை தெய்வக் குழந்தையாய் உல்லாசமாய் மலர்ந்து ஆழ்ந்து நித்திரையிலிருந்தது. கண்ணி லிருந்து புலபுலவென்று நீர் பெருகிற்று!

"என்ன! என்ன இது, ஏன் கண்ணில்—"

"ஒன்றுமில்லை! மெதுவாகப் பேசு! இன்று நம் குழந்தை புனர்ஜன்மமெடுத்தது! படமெடுத்த நாகப் பாம்பினின்றும் உயிர் தப்பிற்று!—"

"ஹா—! என்ன! பாம்பா?— ஐயோ"வென்று கதறிக்கொண்டு ஒரே பாய்ச்சலாய்த் தாவித் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையை அப்படியே எடுத்து மார்போடு அணைத்துக்கொண்டாள், அன்புமிக்கதாய். அவள் கண்ணில் பிரவாக மெடுத்தது.

"ஒன்றுமில்லை, குழந்தையைக் கட்டிலில் மெது வாகவிட்டுவிட்டு நடந்ததைக்கேள்—" என்று விவரமாக மனைவிக்கு என்ன நடந்ததென்று உரைத்தார் டாக்டர் ஸ்ரீராமமூர்த்தி.

"ஆஹா! இவ்வூர் கோபால கிருஷ்ணன் நம் ராஜகோபாலனைக் காத்தருளினார். நாளை தனுர் மாசப்பொங்கலுக்குக் கோவிலில் ஏற்பாடு செய் யுங்கள்" என்று மரியாதையையும் நன்றியறி வையும் தெரிவித்தாள் அவர் மனைவி.

"ஆம்! இவ்வூர் கோபால கிருஷ்ணன் தான் தாதன் சங்கு மூலம் —— ஓகோ மறந்து போனேனே——" என்று அப்படியே விரைந்து வெளி வந்தார் டாக்டர்.

இதற்குள் தாதன் வெகு தூரம் சென்று இடை யர் வீடுகளிருக்கும் தெருவிற்குச் சென்றுவிட் டான். அவனைப் பின்பற்றி ஓடோடியும் வந் தார் டாக்டர். வெகு தூரத்திலிருந்தே இடைத் தெருவில் நடந்தது கண்ணிற்குத் தெளிவாயிற்று. தாதன் சங்கு ஊதிக்கொண்டே வீட்டின் முன் வந்து நிற்கிறான். உடனே அவன் மகனும் மனை வியும் வந்து அவனைப் பணிகிறார்கள். பையன் தந்தையின் சங்கையும் க்ஷேமக் காலத்தையும் வாங்கி, திண்ணைச் சுவரிலிருந்த ஆணியில் மாட்டு கிறான்,

அந்தத் திண்ணையிலிருந்து இரண்டு மூன்று பெண்கள் வந்து, தாங்கள் பற்றியிருந்த குழந்தை களுக்கு அவன் கொடுத்த நீரையும் துளசியை யும் பக்தியுடன் வாங்கிக் கொடுக்கிறார்கள். பின்பு தாதன் வீட்டினுள் நுழைகிறான்!

* * *

என்ன ஆச்சரியம்! டாக்டர் தெரு எல்லையில் வருகிறார். அங்கே தாதனிடம் நீரும் துள சியும் வாங்கின ஒரு கிராமப் பெண் வருகிறாள். "என்னம்மா குழந்தைக்கு—?"

"ரண்டு மாசமாகக் கட்டிங்க. மார்கழி மாதத் துக்காக காத்தேனுங்கா. கொளந்தே நோவாத் துடிச்சுப்பிட்டுது. பொறவு, இங்கனே வந்து ஒரு வாரமா கோனாருகிட்டே நீரும் தொளசியும் வாங்கிக் கொடுக்கிறேனுங்க. இப்போ தேவ லீங்க" என்றாள்.

"ஏனம்மா! ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய் ——"

"ஆமாங்க! ஆஸ்பத்திரி எல்லாம் சரிப்படா துங்க. இப்படித்தான் எங்க சின்னாச்சி, எசக்கி தன் மவளெ பாளையங்கோட்டே ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போனாக. அது இறந்து போய் இன் னிக்கு எட்டு மாசங்க. நமக்கெல்லாம் ஆசுபத் திரியா வேணும்? சும்மா வளக்கம் போலே, நம்ம கோனாரு நீரும் தொளசியும் மார்களி மாதம் வாங்கிப்போட்டாக்க, எம்முட்டு நோவும் பறந் திடுமல்ல!—" என்று சொல்லிக்கொண்டே போய்விட்டாள்!—அவள் நம்பிக்கை டாக்டரிடம் ஊடுருவிப் பாய்ந்தது! டாக்டர் ஒன்றும் பேசாது ஏதோ உண்மை உணர்ந்தவராக எளிமையாய் வீடு திரும்பினார்!

---



# மாடிஸன் பிரயாணம்

சி. வி. ராமகிருஷ்ணன்

இன்றைய இரவு மாடிஸனுக்குப் போக வேண்டும். இது நியூயார்க்கிலிருந்து 1400-மைல் தூரத்திலிருக்கிறது. அமெரிக்காவின் மத்திய மேற்குப் பாகத்தில் (Mid West) சிகாகோ நகரத்தைத் தாண்டியுள்ளது. ரெயிலில் போவதற்கு (Voucher) பம்பாயிலேயே கொடுத்திருந்தார்கள். அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் கம்பெனியின் ஆபீஸுக்குச் சென்று இரவு வண்டியில் இடம் ரிஸர்வ் செய்யச் சொன்னேன். ஐந்தே நிமிஷத்தில் போன் மூலம் ரிஸர்வ் செய்து டிக்கட்டைக் கொடுத்துவிட்டார்கள்.

பகலெல்லாம் தெருக்களில் குறுக்கும் நெடுக்குமாக நாட்டுப்புறத்தான் மிட்டாய்க் கடையைப் பார்ப்பதுபோல் நியூயார்க்கின் கட்டிடங்களைப் பார்த்துக்கொண்டு சுற்றிக் கொண்டிருந்தேன். நம்நாட்டில் கிறிஸ்துமஸ் விடுமுறை நாட்களில் எல்லாரும் சென்னையைத் தேடிக்கொண்டு வருவதுபோல நியூயார்க்கில் விடுமுறை நாட்களைக் கழிக்க அமெரிக்காவின் பல பகுதிகளிலிருந்தும் தென் அமெரிக்காவிலிருந்தும் மக்கள் திரள் திரளாக வருகிறார்கள். நியூயார்க் நகரம் நமக்கு எவ்வளவு புதுமையானதோ அவ்வளவு அவர்களுக்கும் புதுமையானது. பலர் என்னை ஓர் அமெரிக்கன் என நினைத்துக் கொண்டு ஊரைப்பற்றி விசாரிக்கவும் பேசவும் ஆரம்பித்தார்கள். (நான் வெள்ளைக்காரன் மாதிரி இருப்பதனாலல்ல, அமெரிக்காவிலும் அநேக 'நிறமுள்ள' மக்கள் வசிக்கிறார்கள்!) நானும் ஊருக்குப் புதியவன் என்று விளக்க வேண்டியதாயிற்று! நியூயார்க்கில் நிரந்தரமாக வசிப்பவர்களின் தொகையை விடத் தற்காலிகமாக வந்து தங்குகிறவர்களின் எண்ணிக்கை எப்பொழுதும் மிகவும் அதிகம். இதை 'மிதக்கும் ஜனகாரம்' (Floating Population) என்று குறிப்பிடுவார்கள். நம்நாட்டில் பம்பாயையும் கல்கத்தாவையும் இத்தகைய பட்டணங்கள் என்று சொல்லலாம்.

இங்கு ஹோட்டல்களில் மாலை ஆறு மணிக்குள் அறையைக் காலிசெய்துவிட்டால்

அன்றைய தினத்திற்கு வாடகை கிடையாது. ஆறு மணிக்குப் பிறகு என்றால் அன்றைக்கும் சேர்த்து வாடகை தரவேண்டும். ஆகையால் ஹோட்டல் அறையைக் காலி செய்வதற்காக அவசர அவசரமாகத் திரும்பினேன். வழியில் ஒரு 'காப்டிரியா'வில் (Cafteria) நுழைந்து கொஞ்சம் தக்காளிப் பழரசமும் 'ப்ரூட்ஸாலடு'ம் சாப்பிட்டேன். வேறு சாப்பிடக்கூடிய வஸ்துதான் ஒன்றும் காணவில்லை! ஹோட்டலுக்குச் சென்று அறையைக் காலிசெய்து வாடகையைத் தீர்த்துக்கொண்டேன். போன் மூலம் ஒரு டாக்ஸியை வரவழைத்து நியூயார்க் கிராண்ட் ஸென்ட்ரலுக்குப் புறப்பட்டேன். வண்டி என்னவோ ஒன்பது மணிக்குத்தான். ஆனால் அன்று தொழிலாளிகள் தினம் ஆகையால் ஸ்டேஷனில் மூன்று அல்லது நான்கு போர்ட்டர்கள்தான் இருந்தார்கள். தொழிலாளிகளுக்கெல்லாம் பொதுவாக அன்று விடுமுறை. இங்கு நீக்ரோக்கள்தான் கூலிகளாக வேலை செய்கிறார்கள். இவர்கள் சிவப்புக் குல்லாய்களை அணிவதால் ரெட் காப்ஸ் என அழைக்கப்படுகிறார்கள். அன்று அவர்களுக்கு ஏகப்பட்ட கிராக்கியிருந்ததால் காத்திருந்து சலித்துப் போய், நானே என்னுடைய இரு ஸூட்கேஸ்களையும் பாக்கேஜு ரூமில் கொண்டுபோட்டுவிட்டு ஸ்டேஷனைச் சுற்றிப்பார்க்க ஆரம்பித்தேன். இங்கு கோச் டிரெயின், புல்மன் என இருவித வண்டிகள் உண்டு. கோச் ரெயில்வண்டியில் கொஞ்சம் சார்ஜு குறைவு. எல்லா ஸீட்டுகளுக்கும் குஷன் இருக்கின்றன. ஆனால் உட்கார்ந்துகொண்டேதான் பிரயாணம் செய்யவேண்டும். 'புல்மன்' வண்டியில் இரவில் சௌகரியமாகப் படுக்க வசதிகள் உண்டு காற்று வசதி வேறு உண்டு. ஆகையால் இந்த வண்டிக்கு விமானக் கட்டணத்தைவிடச் சார்ஜு அதிகம். இங்கு வண்டிகளில் முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு என வகுப்பு முறை இல்லை. ஆகையால் ஸ்டேஷன்களில் பிரயாணிகள் தங்கும் இடம் ஒரேமாதிரியாகத்தான் இருக்கிறது. நம் ஊர்களில் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகள் தங்கும் இடம் நாய்கள் வசிப்பதற்குக்கூடத் தகுதியற்றவை. இந்த நிலையில் எப்பொழுதுதான் அபிவிருத்தி ஏற்படப் போகிறதோ தெரியவில்லை. பிளாட்பாரத்தின் ஒரு ஓரத்தில் சிற்றுண்டிச்சாலை இருக்கிறது. இன்னோரிடத்தில் சுகாதார வசதிகள் அமைக்கப்பட்டுள்ளன. மற்றோரிடத்தில் இரும்புப் பெட்டிகள் இருக்கின்றன. இருபத்துநான்குமணி நேரத்துக்குள் திரும்பிவிடுவதாக இருந்தால் இந்தப் பெட்டிகளில் சாமான்களைப் பத்திரமாக வைத்துப் பூட்டிவிட்டுக் கவலையில்லாமல் ஊர் சுற்றலாம். நம் ஊர்களில் ஒரு காப்பி சாப்பிட்டுவிட்டு வருவதற்குள் சாமான் என்ன ஆயிற்றோ என்று மனம் திக் திக்கென்று அடித்துக்கொள்கிறது. இந்தமாதிரி வசதிகள் இருந்தால் எவ்வளவோ சௌகரியமாக இருக்கும். இந்த இரும்புப் பெட்டிகளிலேயே அவற்றின் சாவிகள் வைக்கப்பட்டுள்ளன. நாம உள்ளே சாமானை வைத்துவிட்டுப் பெட்டியைப் பூட்டலாம். ஆனால் சாவிக்கருகில் உள்ள துவாரத்தில் 10 செண்ட் போடவேண்டும். அப்பொழுதுதான்பூட்டிய சாவிநம் கைக்குவரும்! பிறகு திரும்பியபின் பெட்டியைத் திறந்து சாமானை எடுத்துக்கொள்ளலாம்.

இங்கு வெய்ட்டிங் ரூம் இங்கிலாந்திலுள்ளதைப்போல் அவ்வளவு சுத்தமாக இல்லை. நாம் கடலைக்காய், வாழைப்பழம் இவற்றின் தோல்களை அசிரத்தையாகப் போட்டுவிடுவதுபோல் இங்கே சாகலெட் காகிதம், ஐஸ்க்ரீம் குச்சி முதலியவற்றை வீசியெறிந்துவிடுவதால் தரை அசுத்தமாகப் போய்விடுகிறது.

புக்கிங் ஆபீஸ் வழியாகச் சென்றேன். பல ஏஜன்ட்கள் மூலம் அவரவர்கள் டிக்கட் வாங்கிக்கொண்டுவிடுவதால் இங்கு அதிகமாகக் கும்பல் கிடையாது. புக்கிங் கிளார்க் என்னைக் கூப்பிட்டு, "இந்தியாவிலிருந்து வருகிறீரா?" என்று விசாரித்தான். "ஆம்" என்று பதிலளித்தேன். "உங்கள் கம்யூனிஸ்ட் நேரு எப்படி இருக்கிறார்?" என்று மகா அக்கரையுடன் விசாரித்தான். "நேரு சௌக்கியந்தான். ஆனால் அவர் கம்யூனிஸ்ட் இல்லை" என்றேன. "கம்யூனிஸ்ட் ஆகையால்தான் ஜப்பான் உடன்படிக்கையில் கையெழுத்துபோட மறுக்கிறார்" என்றான் அவன். (அந்தச் சமயத்தில்தான் ஜப்பான் உடன்படிக்கை முடிக்கப்பட்டிருந்தது) நேரு அயல்நாட்டுக் கொள்கையில் கம்யூனிஸ்டுமல்ல, முதலாளித்துவத்தை ஆதரிக்கிறவருமல்ல. ஒவ்வொரு பிரச்னையையும் தனித்தனியாக ஆராய்ந்து நியாய அபிமானத்தை அனுசரித்து முடிவு செய்வார். எந்த வல்லரசுக் கோஷ்டியுடனும் சேர அவருக்கு விருப்பமில்லை. அவருடைய இக் கொள்கை உலக சமாதானத்தை நிலைநாட்டப் பெரிதும் உதவும் என்று விளக்கினேன். ஆனால் என்னுடைய விளக்கத்தை அவன் ஒப்புக் கொண்டபாடில்லை. திரும்பவும், "இந்தியர்

களாகிய நீங்கள் எங்கள் உணவைத் தின்று விட்டு எங்கள் மக்கள் ஆயிரக்கணக்கில் கொரியப்போரில் மடியும்பொழுது சும்மா நின்று வேடிக்கை பார்க்கிறீர்கள்" என்று குற்றஞ் சாட்டினன். அயல் நாடுகளில் அன்னக்காவடி எடுப்பதன் விபரீதமும் எனக்கு நன்கு புலப்பட்டது. கொரியப் போரில் ஏன் இந்தியா தீவிரமான பங்கு எடுத்துக்கொள்ளவில்லை என்பதை மீண்டும் அவனுக்கு விளக்கினேன். சமாதான இலட்சியத்துடன் கூடிய இந்தியா 'ஆம்புலன்ஸ்' படை அனுப்பியிருப்பதையும் சுட்டிக் காட்டினேன். அவன் விட்டபாடில்லை. மேலும் தொடர்ந்து, "நான் கல்கத்தாவில் சென்ற உலக மகாயுத்தத்தின்பொழுது இருந்திருக்கிறேன். எவ்வளவோபேர் பஞ்சத்தில் பட்டினியால் மடிவதைப் பார்த்தேன். அப்படிப் பட்டினியால் வாடும் மக்கள் ராணுவத்திலாவது சேர்ந்தால் உயிருடன் இருக்கும்வரை நன்ருகத் தின்னலாமே" என்று சோற்றுப்பட்டாளத்தில் இந்தியா சேரச் சிபார்சு செய்துகொண்டு மேலும் உளற ஆரம்பித்தான். கைக் கடியாரத்தைப் பார்த்தேன். வண்டி புறப்பட இன்னும் பத்து நிமிஷங்கள்தான் இருந்தன. "நீ இன்னும் கொஞ்ச காலம் கழித்தாவது நேரு கம்யூனிஸ்ட் இல்லை என்று உணர்ந்து கொள்வாய்; அப்பொழுது எனக்குக் கடிதம் எழுது" என்று சொல்லிவிட்டு நகர்ந்தேன். பின்னல் பலர் இதே ரீதியில் பேசுவதைக் கேட்டேன். பத்திரிகைகள் இந்தியாவுக்கு எதிராக எவ்வளவு தூரம் விஷமப் பிரசாரம் செய்திருக்கின்றன என்பது புலனுயிற்று. ஆனல் விஷயம் தெரிந்தவர்கள் இந்தியர்களைப் பெரிதும் மதிக்கிருர்கள். நம் நாட்டின் கொள்கைகளைச் சரியாக விளக்க நம் நாட்டின் சார்பாக இன்னும் அதிகமாகப் பிரசாரம் செய்ய அரசாங்கத்தார் ஏற்பாடு செய்வது அவசியம் என்று தோன்றியது.

பாக்கேஜ் ரூம் சாமான் அறைக்குச் சென்று நான் பெட்டியை எடுத்துக்கொள்வதற்கும் அங்கு ஒரு சிகப்புக் குல்லாய் வருவதற்கும் சரியாக இருந்தது. சரியென்று அவனை அமர்த்திக்கொண்டேன். கம்பார்ட்மெண்டில் எனக்காக ரிசர்வ் செய்யப்பட்ட இடத்தில் பெட்டியைக்கொண்டு வைத்துவிட்டு ஒரு பெட்டிக்கு 30 செண்டும் மேலே 'டிப்' 10 செண்டும் வாங்கிக்கொண்டு போய் விட்டான். (மொத்தம் 3 ரூபாய்) சாதாரணமாக இங்குப் பிரயாணிகள் கையில் தூக்கிச் செல்லக்கூடிய அளவுதான் சாமான் எடுத்துக்கொள்கிருர்கள். அதிக கனமுள்ள சாமான்களை முன் கூட்டியே ஸ்டேஷனில் 'புக்' செய்துவிட்டால் அவற்றை நாம் இறங்குமிடத்தில் சௌகரியமாகப் பெற்றுக் கொள்ளலாம்.

வண்டிக்குள் இன்னெரு நீக்ரோ இருந்தான். அவன் பெட்டிகளைப் பத்திரமான இடத்தில் எடுத்துவைத்தான். என்னுடைய படுக்கை அறைக்கு என்னை அழைத்துச் சென்ருன். என்ன, ரெயிலில் ஏது படுக்கையறை என்று யோசிக்காதீர்கள். வண்டியின் இரு புறங்களில் உட்காருவதற்காக ஸோபா மாதிரி ஸீட்டுகள் இருக்கும். இரவில் இவை இரண்டையும் ஒன்றுசேர்த்து விடுவார்கள். அப்பொழுது அதுவே மெத்தை மாதிரி ஆகிவிடுகிறது. ஓரறையில் மேலொன்றும் கீழொன்றும் ஆக இரண்டு படுக்கைகள் இருக்கின்றன. பகலில் இவை திரும்பவும் ஸோபாக்களாக மாறிவிடுகின்றன. எனக்கு இருந்த அலுப்பில் இந்தப் படுக்கை வசதி மிகவும் வரவேற்கத்தகுந்ததாக இருந்தது. பணியாள் என்னை மேலேயுள்ள படுக்கையில் ஏற்றிவிட்டு ஸ்க்ரீனை இழுத்துவிட்டுச் சென்ருன். போர்வை விரிப்பு முதலியன படுக்கைமேல் தயாராக இருந்தன. அருகில் உடுப்புகளைத் தொங்கவிட ஒரு ஸ்டாண்டு காணப்பட்டது. ஸூட், கோட் எல்லாவற்றையும் கழற்றி ஸ்டாண்டில் மாட்டினேன். பனியனேடு 'அண்டர்வேரை' மாத்திரம் அணிந்துகொண்டு போர்வையை இழுத்துப் போர்த்துக்கொண்டு படுத்தபடியே 'பெட் ஸ்விட்சை' அமுக்கி விளக்கை அணைத்தேன். "யாதேவீ ஸர்வபூதேஷு நித்ராரூபேண ஸம்ஸ்திதா, நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம:" என்ற சுலோகம் நினைவுக்கு வர அதைச் சொல்லி முடிக்கு முன்னரே நித்ராதேவியின் பூரண கிருபைக்குள்ளானேன். (எந்தத்தேவியானவள் எல்லா உயிர்களிடத்தும் நித்திரை உருவாக விளங்குகிருளோ அவளுக்கு வணக்கம், வணக்கம், பலமுறையும் வணக்கம் என்பது இச்சுலோகத்தின் பொருள்) சீதோஷ்ண ஸ்திதி வெளியே எவ்விதம் இருந்தாலும் உள்ளே குளிர் காலத்தில் உஷ்ணமாகவும் வெயில் காலத்தில் குளிர்ச்சியாகவும் இருக்கும்படி ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. (Central heating and Air conditioning)) ஆகையால் ரெயிலுக்குள் குளிரே கொஞ்சம்கூடத் தெரியவில்லை. சுகமாகத் தூங்க முடிந்தது.

காலை எழுந்தவுடன் எதிரே கண்ணுடி காணப்பட்டது. எழுந்தவுடன் கண்ணுடி

பார்க்க வேண்டுமென்ற சாஸ்திரத்தை யொட்டி வைத்திருக்கிறார்கள் போலும்! கண்ணாடியில் கலைந்திருந்த தலையை வாரிக் கொண்டேன். ஸூட், கோட் எல்லாவற்றையும் சரியாக மாட்டிக்கொண்டு ஸ்க்ரீனை விலக்கிவிட்டு மணியை அடித்தேன். உடனே ஒரு பணியாள் ஓர் ஏணி சகிதம் குட்மார்னிங் போட்டுக்கொண்டு வந்தான். கீழே இறங்கி என் தோல்பையிலிருந்து பல் பசை, பிரஷ் முதலியவற்றை எடுத்துக்கொண்டு 'toilet' அறைக்குச் சென்றேன். ஒரு ஓரத்தில் கக்கூஸும் வெளியே முகம் கைகால் அலம்ப வாஷ்பேஸின், சோப் கரைத்த ஜலம், துண்டுகள் (காகிதத்தால் செய்யப்பட்டவை) முதலியன இருக்கின்றன. காகிதத் துண்டைச் சோப்பு ஜலத்தில் நனைத்து உடம்பை நன்றாகத் துடைத்துக்கொண்டு இன்னொரு துண்டினால் ஈரம் போகும்படி துடைத்துக் கொள்ளலாம். துண்டுகளை உபயோகித்த பின் வீசியெறிந்துவிடலாம். ஈரத் துண்டை ஹோல்டாலில் திணிக்கவேண்டிய தொல்லை இல்லை. அதனால் மற்றத் துணிகளும் நாற்றமெடுத்துப் போகுமென்ற கவலையுமில்லை. வாஷ் பேஸினுக்கருகில் ஒரு 'ப்ளக்' (Plug) இருக்கிறது. இது எலெக்ட்ரிக் ஷேவரைப் பொருத்துவதற்காக. (Electric shaver) இதைப் ப்ளக்கில் பொருத்திவிட்டு ஸ்விட்சைப் போட்டால் ஐந்தே நிமிஷத்தில் க்ஷவர கலியாணத்தை முடித்துக்கொண்டுவிடலாம்! இங்கு, பிரயாணிகள் அநேகமாக 'எலெக்ட்ரிக் ஷேவர்' வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

காலையுணவுக்காகப் போஜன அறைக்குச் (Dining Hall) சென்றேன். என்ன, ரெயிலில் போஜன அறையா என்று கேட்காதீர்கள். இந்த ரெயிலில் சாப்பாட்டு அறை, விச்ராந்தியாக உட்கார்ந்து அரட்டை அடிக்கும் அறை (Lounge) சிகரெட் குடிக்கும் அறை (Smoke-Room) முதலியன தனியாக இருக்கின்றன. ஒரு கம்பார்ட்மெண்டிலிருந்து இன்னொரு கம்பார்ட்மெண்டுக்குப் போக வண்டியைவிட்டு இறங்கியாக வேண்டும் என்பதில்லை. வண்டி ஓடிக்கொண்டிருக்கும் பொழுதே வண்டி முழுவதும் தாராளமாகச் சுற்றலாம். தவிர, கம்பார்ட்மெண்டைவிட்டு இறங்கிச் சாப்பாட்டுக்குப் போவது சாத்யமும் அல்ல. ஏனென்றால் வண்டி அவ்வளவு நீளமானது. கம்பார்ட்மெண்டைவிட்டுப் பிளாட்பாரத்தில் இறங்கி அதன் வழியாகச் சாப்பாட்டு அறையை அடையுமுன் வண்டி ஊதிவிடும்! ஆகையால் பிரயாணம் முடியும்வரை வண்டியைவிட்டு இறங்க வேண்டிய அவசியமே இல்லை. வண்டியிலுள்ள பணியாட்கள் முதற்கொண்டு இந்தியன் என்றால் ஒரு தனி சுவாரஸ்யத்துடன் பேசுகிறார்கள். நம்நாட்டு ரயில் வண்டிகளின் ரெஸ்டாரண்டு காரைப் போல் இங்கும் விலை ஆனை விலை குதிரை விலையாக இருக்கிறது. தவிர, ஒரு கப் டீ சாப்பிட்டாலும் தோரணையாக டிப்வேறு கொடுக்க வேண்டும்.

சாப்பாட்டு அறையில் உட்கார்ந்து காலையுணவை உட்கொண்டவாறு ஜன்னல் மூலம் வெளியே பார்த்துக்கொண்டிருந்தேன். மைல் கணக்கான தூரம் வரை கண்ணுக்குக் குளிர்ச்சியளிக்கும் பசுமையான செழிப்பாக வளர்ந்துள்ள வயல்கள். தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி ஜில்லாக்களில் பிரயாணம் செய்வதுபோன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அங்குக்கூடப் பயிர்கள் இவ்வளவு ஓங்கி வளர்ந்திருக்கின்றன என்று சொல்ல முடியாது. "ஓங்கு பெருஞ் செந்நெலூடு கயலுகள்" என்று ஆண்டாள் பாடிய காலத்தில் அவ்விதம் இருந்தனவோ என்னவோ! ஓங்கு பெருங் கோதுமையும் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்களும், நீங்காத செல்வமும் இப்பொழுது இங்கேதான் இருக்கின்றன. நாம் நாட்டிலும் விவசாய முறைகளையும் பண்ணைமுறைகளையும் அபிவிருத்தி செய்து இந்த நிலை வரும்படிசெய்தால் நன்றாக இருக்கும். அந்தக் காலம் எப்பொழுது வருமோ! நாம் அயல் நாடுகளில் அன்னக்காவடி எடுப்பதுநின்றால் நம் பேரில் நம்முடைய பழைய கலாச்சாரம், அஹிம்சை முறையில் நாம் செய்த போராட்டத்தின் வெற்றி, நம்முடைய தற்கால மேதைகளின் பெருமைகாரணமாக நமக்கு இருக்கும் மதிப்பு பன்மடங்கு உயரும்.

சிற்றுண்டியை முடித்துக்கொண்டு நான் தூங்கிக் கொண்டிருந்த அறைக்குத் திரும்பவும் வந்தேன். படுக்கைகள் மாயமாக மறைந்துவிட்டன. அதற்குப் பதிலாக சொகுசான குஷன் ஸீட்டுகள் காணப்பட்டன. பணியாள் படுக்கைகளைச் சுற்றி மேலே வைத்து, கதவைப் பொருத்தியிருந்தான். வண்டி மணிக்கு 60மைல் வேகத்தில் ஆட்டமேயில்லாமல் போய்க்கொண்டிருந்தது. கண்ணில் தூசி விழும் என்ற பயமில்லை. ஏனெனில் ஜன்னல்களின் கண்ணாடிக் கதவுகளைத் திறக்க முடியாது. காரணம் உள்ளே காற்று வசதி இருப்பதால் கதவுகளை மூடி வைத்திருக்கவேண்டும். இப்பொழுதுதான் காலை ஒன்பது மணி. வண்டி அடுத்தபடி மாலை ஆறுமணிக்குச் சிக்காகோவில்தான் நிற்கும். 1400 மைல் தூரத்திற்கு வண்டி நிற்கும் ஸ்டேஷன்கள் நான்கேதான்! குமரப்பேட்டை அமரப்பேட்டை என்று ஒவ்வொரு கிராமத்திலும் நின்று நம் வயிற்றெரிச்சலைக் கிளப்பும் இந்திய ரயில்வண்டிகளின் நினைவு வந்தது.

எனக்கருகில் விடுமுறைக்காக ஐரோப்பாவிற்குச் சென்று சமீபத்தில் திரும்பிய தம்பதிகள் உட்

கார்ந்திருந்தனர். (அமெரிக்காவில் ஐரோப்பா, இங்கிலாந்து முதலிய நாடுகளிலிருந்து குடியேறிய மக்கள்தாம் அதிகம். இவர்கள் பத்து வருஷத்துக்கு ஒரு முறையாவது தாம் சேர்த்து வைத்த பணத்தை எல்லாம் எடுத்துக்கொண்டு தாய் நாட்டில் சிறிதுகாலம் குஷியாகக் கழிக்கச் சென்றுவிடுகின்றனர். ஆகையால் அட்லாண்டிக் கப்பல்களில் கோடை நாட்களில் இடம் கிடைப்பது மிகவும் கஷ்டம். ரங்கூனிலும் மற்றக் கீழ் நாடுகளிலும் குடியேறியுள்ள இந்தியர்கள் சில வருஷங்களுக்கு ஒரு முறையாவது இந்தியாவைத் தேடி வருவது நினைவுக்கு வந்தது) அவர்கள் ஸான் பிரான்ஸிஸ்கோவுக்குப் போவதாகச் சொன்னார்கள். இந்தியாவைப் பற்றி மிக ஆர்வத்துடன் பல கேள்விகள் கேட்டார்கள். "உங்கள் நாட்டில் ஜாதி வித்தியாசம் அதிகமாக உண்டாமே? பிராமணர்கள் உயர்வு, மற்றவர்கள் தாழ்வு என்றெல்லாம் வித்தியாசம் காட்டுகிறீர்களாமே?" என்று கேட்டார்கள். "எங்கள் நாட்டில் அவ்வித வித்தியாசங்கள் ஒரு காலத்தில் தீவிரமாக இருந்தது வாஸ்தவந்தான், ஆனால் இப்பொழுது அவற்றை ஒழித்து வருகிறோம். இந்த வித்தியாசங்களை ஒழிக்க வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டு முதலில் கிளம்பியவர்கள் பிராமணர்களே. 'பாப்பானை ஐயர் என்ற காலமும் போச்சே' என்று பாடியவனும் ஒரு பாப்பான் தான். இப்பொழுது கல்வி, உத்யோகம் முதலிய எல்லா வசதிகளும் அனைவருக்கும் சமமாக அளிக்கப்படுகின்றன. திறமையுள்ள பிராமணரல்லாதார் பலர் உயர்ந்த பதவிகளை வகிக்கின்றனர். இப்பொழுது மற்றவர்களுக்கு விசேஷ சலுகைகள் உண்டே யொழிய, பிராமணர்களுக்கு ஒன்றும் கிடையாது. அவர்கள் விசேஷ சலுகைகளை விரும்பவும் இல்லை. தவிர, எங்கள் நாட்டில் பொது இடங்களான பள்ளிக்கூடங்கள், ஹோட்டல்கள், ஆஸ்பத்திரிகள், கோவில்கள் முதலிய இடங்களில் ஒருவித வித்தியாசமும் இல்லை. ஆனால் மிகவும் முன்னேற்றமடைந்ததாகக்கருதப்படும் உங்கள் நாட்டிலோ நீக்ரோக்களை இன்னும்தள்ளிவைத்திருக்கிறீர்கள். சிலபள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும்அவர்கள் மற்றவர்களுடன் சேர்ந்து படிப்பதற்குக்கூட உரிமை இல்லையே?" என்று கேட்டேன். "நாங்கள் உங்கள் நாட்டிற்கு வந்து பிரயாணம் செய்வது போல நீங்களும் எங்கள் நாட்டிற்கு விஜயம் செய்தால் இந்தியா பற்றி நீங்கள் கொண்டிருக்கும் பல அபிப்பிராயங்கள் தவறானவை என்று உணர்ந்து கொள்வீர்கள்" என்று என் குட்டிப் பிரசங்கத்தை நான் மேலும் தொடர்ந்துகொண்டே இருக்கும்பொழுது அந்த ஐரோப்பிய மாது குறுக்கிட்டு, "நீக்ரோ என்று சொல்வது மரியாதையல்ல. நிறமுள்ள மக்கள் (Coloured people) என்று சொல்ல வேண்டும்" என்று கூறிவிட்டு, எனக்கு எதிரே ஒரு நீக்ரோ உட்கார்ந்திருந்ததையும் அவருக்கு நீக்ரோ வென்று குறிப்பிடுவது கோபத்தையும் வருத்தத்தையும் தருமென்றும் சுற்றிக் காட்டினாள். பிறகு "நீங்கள் சொல்வது உண்மையே. இப்பொழுதுகூட தெற்கே சென்றால் பணக்கார வெள்ளையர்களிடம் நிறமுள்ள மக்கள் அடிமை வேலை செய்கிறார்கள். பெரிய ஹோட்டல்களிலும் வீடுகளிலும் சமையல் செய்பவர்கள் அவர்கள் தான். ஆனால் அங்கே நீக்ரோக்கள் சாப்பிட மாத்திரம் கூடாது, தவிர, பணம் படைத்த நீக்ரோக்களே ஏழையாயுள்ளவர்களை அவமதிக்கிறார்கள். நீக்ரோ வெள்ளையனிடம் அடிமை வேலை செய்வானே யொழிய இன்னொரு நீக்ரோவிடம் வேலை செய்ய மாட்டான்" என்றெல்லாம் அடுக்கிக் கொண்டு போனார். நீக்ரோக்கள் சமைக்கும் ஹோட்டல்களில் நீக்ரோக்கள் சாப்பிடக்கூடாது என்றதும் நம் நாட்டில் சாதாரணமாக நடக்கும் சில நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன. மிராசுதார் வண்டியைப் பறையன் ஓட்டிக் கொண்டு வருவான்; வண்டியில் அவனருகில் அமர்ந்து பேசிக்கொண்டு வரும் அவர் வண்டியை விட்டு இறங்கியதும் தூரத்திலிருந்து சில்லறையை விட்டெறிவார்! ஏனெனில், நெருங்கினால் தீட்டு! முறம், துடைப்பம் முதலியவற்றை ஜலம் தெளித்து எடுத்துக்கொண்டு ஜன்ம சாபல்யமடைகிறார்கள். இவற்றையெல்லாம் மனத்தில் நினைத்துக் கொண்டே நான் அந்த ஐரோப்பிய மாதிடம் "என்றைக்கு நீங்கள் நீக்ரோக்களை உங்களைப் போலவே மதித்து நடத்துகிறீர்களோ, எப்பொழுது அவர்களும் உங்களைப்போல் கல்வி சுகாதாரம் முதலிய எல்லாவிஷயங்களிலும் சமமான வசதிகள்பெற்று வாழ்கின்றார்களோ, அன்றுதான் கிழக்குக்கும் மேற்குக்குமுள்ள பிளவு நீங்கும்" என்றேன். (கிழக்கு — கீழ்நாட்டுமக்கள். பெரும்பாலும் நிறமுள்ளவர்கள், மேற்கு — மேல்நாட்டார், பெரும்பாலும் வெள்ளையர்கள்) இப்படி நாங்கள் பேசிக்கொண்டே இருக்கும்பொழுது பணியாள் வந்து, 'பகல் போஜனம் தயார்' என்று அறிவித்தான். "வயிற்றுக்குணவு இல்லாதபோழ்து சிறிது செவிக்கும் ஈயப்படும்" என்ற கொள்கையைக் கைக்கொண்டிருந்த நாங்கள் 'டக்' கென்று பேச்சை நிறுத்திக்கொண்டு சாப்பிடச் சென்றோம்!

சாப்பாடானதும் ஒரு நல்ல தூக்கம் போட்டேன். உண்டமயக்கம் தொண்டருக்கும் உண்டு என்று சும்மாவா சொல்லியிருக்கிறார்கள்! நான்கு மணிக்கு எழுந்து முகம் கழுவிக்கொண்டு டீயைக் குடித்தேன். எப்பொழுது ஆறு மணியாகும் என்று காலத்தை எதிர் நோக்கிக்கொண்டிருந்தேன், (சிகாகோவில் ஆறுமணிக்கு வண்டி மாற வேண்டும்) சற்றுத் தூரத்தில் ஒரு வியாபாரியும் ஒரு விஞ்ஞானியும் ஒருவர்க்கொருவர் தங்களைத் தாமே அறிமுகப் படுத்திக்கொண்டு அவரவர் தொழிலைப்பற்றி அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தார்கள். (ஆங்கிலேயர்கள் பிறர் அறிமுகப் படுத்தினாலன்றி ஒருவரோடொருவர் பேசுவதில்லை. ஆனால் அமெரிக்காவில் யார் வேண்டுமானாலும் சகஜமாக, ஒருவித சம்பிரதாயமான அறி

முகம் இல்லாமல் பேசுகிறார்கள். இன்னொருவர் ஒரு பெரிய கத்தை சமாசாரப்பத்திரிகைகள் வாரப் பத்திரிகைகள் முதலியவற்றை என்பக்கம் தள்ளினார். நான் சும்மா உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, எனக்குப் பொழுது போக்காக இருக்கட்டும் என்று கருதினார் போலும்! ஆனால் எனக்கு அப்பொழுது எதுவும் படிப்பதில் மனம் செல்லவில்லை. அவருக்கு வந்தனம் கூறிவிட்டு, மரியாதைக்காக ஐந்து நிமிஷம் அவற்றைப் புரட்டிப் பார்த்துவிட்டு, திரும்பக் கொடுக்க யத்தனித்தேன். "அப்படியே போட்டுவிடுங்கள், எனக்கு வேண்டாம்" என்றார். இங்கே பத்திரிகைகள் தண்ணீர் பட்டபாடு படுகின்றன. காரணம் அனேகமாக எல்லோரும் பத்திரிகைகள் வாங்குவதால் அவற்றை மிகவும் மலிவான விலைக்கு அச்சிடமுடிவது தான். ஆகையால் பழைய பத்திரிகைகளைச் சீந்துவாரில்லை. ஒரே குடும்பத்தில் பலரிருந்தால் ஒவ்வொருவரும் தனித்தனியாகப் பத்திரிகை வாங்கிப்படிக்கிறார்கள். அதுவும் ஒவ்வொரு பெரிய பட்டணத்திலும் பல சமாசாரப் பத்திரிகைகள் வெளியாகின்றன. மக்கள் அவரவர்கள் ஊரில் வெளியாகும் பத்திரிகைகளையே விரும்பிப் படிக்கிறார்கள். பேப்பர் விலை மிகக் குறைவாக இருக்கும்பொழுது நூறு பக்கம் எடையை யார் தூக்கிக்கொண்டு போவது? எச்சில் இலைகளைப் போலப் படித்த பேப்பர்கள் விட்டெறியப்படுகின்றன. நம் நாட்டில் ஒரு 'ஹிந்து' வைப் பலர் சேர்ந்து வரவழைப்பதும், ஆளுக்கொரு பக்கமாகத் தலையைக் குனிந்தும் நிமிர்ந்தும் சாய்த்தும் படிப்பதும், இக் கூட்டு வியாபாரத்தினால் பல சண்டை சச்சரவுகளும், பழைய தாள்களைக் கர்மசிரத்தையாகச் சேர்த்து வைப்பதும் ஞாபகத்துக்கு வந்தன!

வண்டி சிக்காகோவை நெருங்கிக்கொண்டிருந்தது. சிக்காகோவில் இறங்கி நார்த் வெஸ்டர்ன் ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போகவேண்டும். மத்தியானம் என்னுடன் பேசிக்கொண்டிருந்த தம்பதிகள் தாங்களும் அங்கேதான் போக வேண்டுமென்றும் ஊர் எனக்குப் புதிதாகையால் என்னையும் தங்களுடன் அழைத்துச்செல்வதாகவும் கூறினார்கள். வண்டியும் ஒருவாறு சிக்காகோவில் நின்றது. பணியாள் பெட்டிகளைப் பிளாட்பாரத்தில் இறக்கிவைத்துவிட்டுப் பொருள்நிறைந்த புன்னகை ஒன்று புரிந்தான். அவனுக்கு ஒரு 'க்வார்ட்டர்' ($1\frac{1}{4}$ ரூபாய்) கொடுத்துவிட்டு, சிகப்புக் குல்லாய்க்காகக் காத்திருந்தேன். அதற்குள் என்னை அழைத்துச் செல்வதாகச் சொன்ன அந்தத் தம்பதிகள் மாயமாக மறைந்துவிட்டனர்! இங்கும் ரெயில் சிநேகம் என்பது இப்படித்தான் போலிருக்கிறது என்று மனத்தில் நினைத்துக் கொண்டேன். இங்கிலாந்தைப் போலல்லாமல் இவர்கள் தாராளமாகப் பழகுகிறார்களே என்று பார்த்தால் நட்பு விஷயத்தில் வாயோடு சரியோ என்று தோன்றியது. ஒரு போர்ட்டரிடம் சாமானைக் கொடுத்துவிட்டு டிக்கட் வாங்கிக் கொண்டு வெளியே டாக்ஸி ஸ்டாண்டிற்குச் சென்றேன். அதற்குள் அவனும் அங்கே சாமானைக் கொண்டு வந்தான். டாக்ஸி ஐந்தே நிமிஷத்தில் நார்த் வெஸ்டர்ன் ரெயில்வே ஸ்டேஷனை அடைந்தது. திரும்பவும் ஒரு சிகப்புக்குல்லாயிடம் சாமானைக் கொடுத்துவிட்டு, பிளாட்பாரத்திற்குள் நுழைந்தேன். நீண்ட ரயில் வண்டி ஒன்று நின்று கொண்டிருந்தது, ஒவ்வொரு ஊருக்கும் ஒரு கம்பார்ட்மெண்ட் தனியாக இருந்தது. ஒரு கண்டக்டர் தனியாக ஒரு கம்பார்ட்மெண்டில் நின்று கொண்டு "மாடிஸனுக்கு இங்கே ஏறுங்கள்" என்று கத்திக் கொண்டிருந்தான். நானும் உள்ளே ஏறி ஒரு ஸீட்டில் என் கைப்பையை வைத்துவிட்டு, ஆட்டைப் பறி கொடுத்த இடையன் போல் வெளியே வந்து வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தேன். கண்டக்டர் என்ன வேண்டுமென்று விசாரித்தான். "என் பெட்டி இன்னும் வரவில்லை. அதைத் தூக்கிக் கொண்ட ஆளையும் காணவில்லை" என்று மிக்க கவலையுடன் சொன்னேன். சிகாகோ வழிப்பறிக் கொள்ளைகளுக்குப் பேயர் போன இடம் என்று நாவல்களில் படித்ததெல்லாம் என் மனக்கண்முன் தோன்றலாயிற்று. கண்டக்டர் சிரித்துக் கொண்டே "பயப்படாதீர்கள், இன்னும் பல பேரிடம் பெட்டிகளைச் சேகரித்துக் கொண்டு எல்லாவற்றையும் ஒன்றாகக் கொண்டு வருவான்" என்று விளக்கினான். ஆனால் எனக்கென்னவோ மனது சமாதானம் அடையவில்லை. கடைசியாக, வண்டி புறப்பட ஐந்து நிமிஷத்திற்கு முன் என் சாமான்களைக்கொண்டு வந்த பிறகு தான் எனக்கு உயிர் வந்தது. நிம்மதியாக நான் என் இடத்தில் உட்கார்வதற்கும் வண்டி கிளம்புவதற்கும் சரியாக இருந்தது. பின்னால் தான், சிக்காகோவில் பழுத்த முதலாளிகளைத் தான் நாகரிகக் கொள்ளைக்காரர்கள் கவனித்துக் கொள்கிறார்களே யொழிய என் போன்ற நடுத்தர வகுப்பாரைச் சட்டை செய்பவர்களே கிடையாது என்பது தெரிந்தது. வண்டி பழையபடி வேகமாக ஓட ஆரம்பித்தது. (இங்கே தான் பிறப்பு இறப்பு எல்லாமே கன வேகத்தில் நடக்கின்றனவே!) நடுவில் ஒரு கண்டக்டர் வந்து டிக்கட்டுகளை எல்லாம் வாங்கிக் கொண்டு போய்விட்டான்.

இரவு எட்டரை மணிக்கு வண்டி மாடிஸனில் நின்றது. என்னை ஸ்டேஷனில் சந்திக்கும்படி "என்ஜைம் இன்ஸ்டிட்யூட்டி"ல் வேலை பார்க்கும் ஓர் இந்தியருக்குத் தந்தி கொடுத்திருந்தேன். அவர் வந்திருக்கிறாரோ இல்லையோ, புது ஊரில் எங்கே தங்குவது என்ற கவலை வேறு. சாமான்களைக் கண்டக்டர் கீழே எடுத்து வைத்து விட்டான். பிளாட்பாரத்தைச் சுற்றிலும் பார்த்தேன், சாதாரணமாக நம் ஊர்களில் காணப்படும் ஆரவாரமோ சந்தடியோ ஒன்றுமில்லை. டிக்கட் கலெக்டர்கூடக் கிடையாது. ஒரு ஓரத்தில் ஒரு வெள்ளையரும் ஒரு நிறமுள்ள மனிதரும் நின்று கொண்டிருந்தார்கள். அந்த நிறமுள்ள மனிதர் தலை வழுக்கை விழுந்து குள்

ளமாக, முகம் கொஞ்சம் தட்டையாக இருப்பதைப் பார்த்து அவர் இந்தியரா, நீக்ரோவா என்ற சந்தேகம் வந்துவிட்டது. நியூயார்க் விமான நிலயத்தில் நடந்தது ஞாபகத்துக்கு வந்தது. அங்கே பாட்டாச்சாரியர் என்ற இந்தியரை எதிர்பார்த்துக்கொண்டிருந்த நான் அங்கிருந்த பல நீக்ரோக்களை ஒவ்வொருவராக "நீங்கள்தான் பாட்டாச்சாரியரா?" என்று விசாரித்தேன். தெனாலிராமன் 'வளர்த்த' பூனை கதைபோல் இப்பொழுது இவரைப் பார்த்ததும் நீக்ரோவோ என்ற சந்தேகம் வந்தது இயற்கைதானே. எதற்கும் அருகே போய்ப் பார்க்கலாம் என்று அவர்களை நோக்கி நகர்ந்தேன். அதற்குள் இருவரும் என்னை நோக்கி வந்து, "நீங்கள்தான் Lipase ராமகிருஷ்ணனா?" என்று கேட்டார்கள். ('லைபேஸ்' விஷயமாக நான் செய்த ஆராய்ச்சிகளே புரொபஸர் க்ரீன் என்னை அழைப்பதற்குக் காரணமாக இருந்தன) "ஆம், நீங்கள்?" என்றேன். இவர் ஜெர்மனியிலிருந்து நம்மைப்போல் இங்கு வேலை செய்ய வந்திருக்கும் டாக்டர் பெய்னர்ட். நான்தான் நீங்கள் எழுதியிருந்த சர்கார்" என்றார் அந்த இந்தியர். அவர் ஒரு வங்காளி என்று பெயரிலிருந்தே ஊகித்துக்கொண்டேன். இருவரும் என் சாமான்களைத் தூக்கிக்கொண்டு ரோடில் உள்ள அந்த ஜெர்மானியரின் காரில் வைத்தார்கள். (இங்குத்தான் மூவரில் ஒருவர் கார் வைத்துக்கொண்டிருக்கிறார்களே) நான் காரின் இடது பக்கம் சென்று முன் ஸீட்டின் கதவைத் திறந்தேன். என்ன நீங்களே காரை ஓட்ட ஆசைப்படுகிறீர்களா? என்று குறும்பாகக் கேட்டார் அந்த ஜெர்மானியர். அப்புறம் பார்த்தால் காரின் இடது பக்கம்தான் 'ஸ்டியரிங் வீல்' இருந்தது. இங்குள்ள கார்களெல்லாமே இடதுபக்கம் ஓட்டக்கூடியனவாக இருக்கின்றன. "ஏது, இவர் பெரிய ஆளாக இருப்பார் போலிருக்கிறதே" என்று நினைத்துக்கொண்டு அவருக்கு வலது புறம் உட்கார்ந்தேன். அவர் காரை ஓட்ட, பத்தே நிமிஷங்களில் அவர் வீட்டை அடைந்தோம். அங்கு எனக்கு, தங்க ஓர் அறை ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததாகப் பேச்சுவாக்கில் அறிந்தேன். அந்த வங்காளியும் அங்கேதான் அறைவைத்துக் கொண்டிருந்தார். காரிலிருந்து இறங்கி நேரே மாடிக்குச் சென்றோம். அந்த ஜெர்மானியரின் மனைவியார் மேல் நாட்டு ஸ்திரீகளுக்கே இயற்கையான ஒரு செயற்கைப் புன்முறுவலுடன் எங்களை வரவேற்றார். "சாப்பிடலாமா?" என்று கேட்டார். "இல்லை, சாப்பாடெல்லாம் ஆகிவிட்டது. அசதியாக இருக்கிறபடியால் படுக்க வேண்டும்." என்றேன். எனக்காக ஒதுக்கப்பட்டிருந்த அறைக்கு என்னை அழைத்துச் சென்றார்கள். அழகிய விரிப்பு, கம்பளியுடன், சொகுசாக விரிக்கப்பட்டிருந்த படுக்கை என் கண்ணைக் கவர்ந்தது. அனைவருக்கும் ஒரு குட் நைட் போட்டுவிட்டு அப்படியே படுக்கையில் சாய்ந்தேன். பன்னிரண்டாயிரம் மைல் பிரயாணம் ஒருவாறாக முடிந்தது என்ற ஆச்வாசத்தில் அயர்ந்த தூக்கம் வந்தது. ஒரு வருஷ காலம் தங்கவேண்டிய இப் புது ஊரைக் காலையில் சுற்றிப் பார்க்கவேண்டும் என்ற நினைவுடன் சீக்கிரத்தில் தூங்கிவிட்டேன். (தொடரும்)

# அன்னையின் ஊழிக் கூத்து!

**நா. கி. நாகராசன்**

இயற்கையன்னையின் ஆடல்கள் அனைத்தையும் பாடிப் புகழுவது புலவர்களது வழக்கமாய் இருந்துவந்துள்ளது. அவளது திருவிளையாடல்களில் சூறை அவர்களது கவனத்தைப் பெரிதும் கவர்ந்துள்ளது. அவளது அளப்பறிய ஆற்றல் சூறையின் போதுதான் நம் முழுமனதையும் ஈடுபடச் செய்து அவளது சக்தியின் பெருமையைப் பற்றி எண்ணி வியப்படையத் தூண்டுகிறது. இயற்கையைப் பற்றிய கவிகளைப்பாடுவதில் வல்ல ஆங்கில நாவலர் ஒருவர் "இயற்கையின் எழில் பொருந்திய தோற்றத்தை விட அதன் கொடிய உருவமே எனக்கு மகிழ்வைத் தருகிறது. ஏனெனில் அப்போதுதான் இயற்கையின் மாசக்தியின்முன் பஞ்சை மனிதன் எம்மாத்திரம் என்று தெளிவாகிறது. சிருஷ்டியின் சிகரமெனப்பெருமை கொள்ளும் மானிடன் பணிவைப் பெற இது உதவுகிறது" என்று கூறுகிறார். அன்னையின் கோர உருவங்களிலேயே தலை சிறந்து விளங்குவது அவளது ஊழிக் கூத்தோ என உலகோர் அஞ்சுமாறு வீசும் சூறைக் காற்று. மனித அறிவு இயற்கை விளைவுகளின் முன் பூரணமாகத் தோல்வி அடைவது புயலடிக்கும்போதுதான். புயலடிக்கும் இடத்தையும், நாளையும், நேரத்தையும்கூட மானிடன் முன்கூட்டி அறியமுடிகிறது. அதன் தன்மையையும் அவன் ஊகிக்க முடியும். ஆனால் அவனால் அதைத் தடுக்க முடியுமோ என்றால் அதுதான் இயலாது. பிரும்மாண்டமான இந்த இயற்கை விளைவின் நாசத்தையாவது அவனால் குறைக்க முடியுமோ எனில் அதுவும் அவனது சக்திக்குப் புறம்பானதே. "காற்றடித்துக் கடல் குமுறுது கண்ணை விழிப்பாய் நாயகனே" என்று கவிஞரது கற்பனையில் இல்லாள் தனதுகணவனை எழுப்புகிறாள். ஆனால் கணவன் விழித்தெழுந்து செய்வதென்ன உள்ளது? "தீனக் குழந்தைகள் துன்பப்படாதிங்கு தேவியருள் செய்யவேண்டுகிறோம்" என்று துதிப்பதைத் தவிர அவன் வேறென்ன செய்யமுடியும்?

சென்ற மாதம் 30ஆம் தேதி இயற்கையின் ஊழிக்கூத்து தமிழ்நாட்டின் கீழ் கடற்கரையில் கொடிய வகையில் நடைபெற்றது. புயல் நிவாரண வேலையைப் பல மாதங்கள் மும்முரமாகச் செய்தாலும் சீர்படாத அளவு நாசம் நேர்ந்துவிட்டது. பல்லாயிரக்கணக்கான "வறியவருடைமையை வாயு பறித்துவிட்டான்." உடைமைகளோடு உயிர்களையும் பலிகொள்ளும் காற்றுக் கடவுளுக்கு இம்முறை உயிர்ப்பசி அவ்வளவாக இல்லை போலும்! இப்புயலின்போது உயிர்ச் சேதம் அதிகமாக இல்லை. 1737-ஆம் ஆண்டு அக்டோபர் 7-ஆம் தேதி வங்காளத்தில் வீசிய புயலின்போது ஹுக்ளி நதியில் எழுந்த அலையேற்றத்தினால் மட்டும் 3,00,000 உயிர்கள் பலியாயின. அந்நாளன்று இயற்கையன்னையின் இரத்த வெறி வரம்புகடந்து போய்விட்டது போலும். 1881-ஆம் ஆண்டு அக்டோபர் 8-ஆம் தேதி சீனக் கடற்கரையில் ஸ்வாடோ என்ற இடத்தில் வீசிய புயலின்போது வந்த வெள்ளத்தில் இதைவிட ஒரு லட்சம்பேரை அதிகமாகக் கொள்ளை கொண்ட பின்னரே இயற்கையின் சீற்றம் தணிந்தது.

வெப்ப நாட்டுச் சூருவளிகள் என்ற வானிலை விளைவுகள் உலகிலுள்ள பல வெப்ப நாடுகளின் கடற்கரைப் பகுதிகளில் தோன்றுகின்றன. ஒவ்வொரு நாட்டிலும் இவை தனிப்பட்ட பெயர்களால் அழைக்கப் பெறுகின்றன. மேற்கிந்தியத் தீவுகளில் இது பெருங் காற்று என்ற பொருளுள்ள 'ஹரிகேன்' என்ற பெயரால் வழங்குகிறது. சீனக் கடற்கரையில் இதே பொருளுள்ள டைபூன் (Typhoon) என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. ஆஸ்திரேலியாவின் வடமேற்குக் கடற்கரையில் இதை "விருப்பு—வெறுப்பு" என அழைக்கிறார்கள்!

நம்நாட்டில் இவை வங்காள விரிகுடாவிலும், அரபிக் கடலிலும் பொதுவாக வீசுகின்றன. தமிழ்நாட்டின் கீழ் கடற்கரை ஐப்பசி கார்த்திகை மாதங்களில் பெறும் மழை பெரும்பாலும் புயல் விளைய ஏற்ற சூழ்நிலையில் பெய்வதே. இச்சுழற்காற்றின் கடுமை கடற்கரைப் பகுதிகளில் மிக அதிகமாக இருக்கும். கடற்கரையைத் தாக்கும் சூருவளி தரையின்மேல் செல்லும்போது மிக விரைவில் தனது வலிமையை இழந்துவிடு

இறது. இதனால் தீவுகளும், கடற்கரைப் பிரதேசங்களுமே இப்பேய்க் காற்றினால் அதிகமாகப் பாதிக்கப்படுகின்றன. ஆனால் இதற்கும் விலக்குண்டு. வங்காளக் கடலில் தோன்றிய சுழற்காற்று வடமேற்குத் திசையில் சென்று இமயத்தைத் தாண்டி வலியிழந்து, சீனத்தைக் கடந்து சென்று, சீனக் கடலில் திரும்பவும் தனது முழு வலிமையையும் பெற்றுப் பெருஞ் சேதம் விளைவித்ததுண்டு? ஆனால் சுழலானது இவ்வளவு நெடுந்தொலைவு செல்ல ஏற்ற சூழ்நிலை மிக அருமையாகவே அமைகிறது. ஆகையால் பொதுவாகச் சுழற்காற்று நிலப்பகுதியை அடைந்து சில நூறுமைல்களுக்குள் தனது பேயாற்றலை இழந்துவிடுகிறது.

வெப்பநாட்டுச் சூறைகள் தமது ஆற்றலை எங்கிருந்து பெறுகின்றன என்பதை மிக எளிதில் விளக்கலாம். நம் நாட்டுக் கடற்கரைகளில் இவை சாதாரணமாக ஒரு பருவக்காற்றின் தீவிரம் குறைந்து இன்னொரு பருவக் காற்றுத் தொடங்குவதற்குமுன் உள்ள இடைக்காலத்தில் தோன்றுகின்றன. அதனால்தான் இவை கோடையில் சித்திரை வைகாசி மாதங்களிலும், கார்காலத்தில் ஐப்பசி கார்த்திகை மாதங்களிலும் வீசுகின்றன. (வடகிழக்குப் பருவக் காற்று இவ்வாண்டு சிறிது தாமதமாக வீசத் தொடங்கியதால் அண்மையில் வீசிய புயலும் சற்றுக் காலந்தவறித் தாமதமாகத் தேரன்றியது.) காற்றின் வலிவு குறைவான இந்த இடைக்காலத்தில் வெப்பநாட்டுப் பிரதேசங்களிலிருந்து வீசும் காற்றும், பூமத்தியரேகைப் பகுதிகளிலிருந்து வீசும் காற்றும்சில சமயங்களில் சந்திக்கும் வெவ்வேறான வெப்ப நிலைகளும் ஈர நிலைகளும்கொண்ட இக்காற்றுக்கள் சந்திக்கும் இடத்தில் ஈரமான காற்று மேலெழுந்து குளிரும். புவியின் சுழற்சியால் அங்கு நிகழும் கலக்கம் தீவிரமடைந்து பெரிய சுழலாக மாறுகிறது. மேலெழும் காற்றிலுள்ளநீராவி குளிர்ந்து நீராகிறது. தண்ணீரை ஆவியாக்க அதைச் சூடேற்றவேண்டும். ஆகையால் ஆவியாகிய நீர் இந்த வெப்பத்தைத் தன்னிடத்தே கொண்டிருக்கும். இதனால் இதற்கு எதிரான விளைவு நிகழ்ந்து நீராவி நீராக மாறும்போது இந்த வெப்பம் வெளிப்பட்டாகவேண்டுமல்லவா? ஏராளமாகத் தோன்றும் இந்த வெப்ப ஆற்றலே கடலைக் கடைந்து, கட்டடங்களைத் தகர்த்து, மரங்களை வீழ்த்தி, உயிர்களைக் கொள்ளை கொள்ளும் ராட்சஸ சக்தியாகப் பரிணமிக்கிறது.

காற்று மண்டலத்தில் தோன்றும் சுழல் புவியின் சுழற்சியால் தீவிரமடைகிறது என்றேன். புவியின் சுழற்சியால் அதைச் சுற்றிலுமுள்ள காற்று மண்டலமும் சுழல்கிறது. இத்னால் தோன்றும் விசைகள் துருவ மண்டலங்களைவிடப் பூமத்தியரேகைப் பிரதேசங்களில் அதிகமாக இருக்கும். இதனால்தான் சூறுவளிகள் பூமத்தியரேகையின் இரு புறங்களிலும் 5° அட்ச ரேகையிலிருந்து 15° அட்சரேகைவரையில் உள்ள பகுதிகளில் அதிகமாகத் தோன்றுகின்றன. கரற்றுமண்டலத்தில் இவற்றின் உயரம் 15,000 அடியிலிருந்து 30,000 அடிவரை இருக்கலாம். இவ்வளவு உயரம்வரை நேர்குத்தான காற்றோட்டங்கள் காற்று மண்டலத்தில் நிகழும்போது உயரத்திலுள்ள காற்று மண்டலமும் இதனால் பாதிக்கப்படுகிகிறது.

### புயலடிக்கும் பகுதிகள்



வெப்பநாட்டுச் சூருவளிகள் நிகழும்போது காற்றின் கடுமை அதிகமாக இருக்கப் புவியின் சுழற்சியே முதற் காரணம். எனினும், சுழலைச் சுற்றிலும் தோன்றும் தீவிரமான அழுத்த வேறுபாடுகளும் காற்றின் வேகத்தை அதிகமாக்குகின்றன. வானிலை நிலையங்களில் அன்றாடம் காற்றின் அழுத்தத்தை அளவிட்டு அதைத் தேசப்படத்தில் குறிக்கிறார்கள். காற்றின் அழுத்தம் ஒரே சமமாகவுள்ள பல இடங்களை ஒரு கோட்டினால் இணைக்கலாம். இவ்வாறு வரையப்படும் கோடுகள் சம அழுத்தவரைகள் (Isobars) எனப்படும். சுழல் தோன்றும் பகுதியில் உள்ள சம அழுத்தவரைகள் வட்ட வடிவாகவும் நெருக்கமாகவும் இருக்கும். வரைகள் நெருக்கமாக உள்ள இடங்களில் அழுத்த வேறுபாடு மிகவும் அதிகம் என்பது தெளிவு. இரு இடங்களின் அழுத்தங்கள் வேருக இருந்தால் தாழ்ந்த அழுத்தமுள்ள இடத்தை நோக்கி உயர்ந்த அழுத்தமுள்ள இடத்திலிருந்து காற்று வீசும். ஆகையால் வட்டமான சம அழுத்த வரைகள் உள்ள இடத்தில் சுழற்காற்று வீசுகிறது. அழுத்த வேறுபாடுகள் குறைந்தபின் காற்றின் வலிமையும் குறைகிறது. ஒரு புயலின்போது சம அழுத்த வரைகள் எவ்வாறு மாறுகின்றன என்பதைப் படம் தெளிவாக்கும். கடற்கரையை அடையும் சூறையின் ஆற்றல் குறையக் குறையச் சம அழுத்த வரைகளின் நெருக்கம் குறைவது படங்களிலிருந்து தெளிவாகும். வட்டமான அழுத்த வரைகளின் மையத்தை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். இது புயலின் "கண்" (Eye) எனப்படும். இங்கே காற்றின் வேகம் மிகக் குறைவாக இருக்கும். ஆனால் சற்றுத் தொலைவிலேயே காற்றின் வேகம் உச்ச நிலையை அடையும். சில சமயங்களில் அது மணிக்கு 150 அல்லது 200 மைல் வரை இருக்கக்கூடும். புயலின் கண் ஓரிடத்தைக் கடக்கும்போது அந்த இடத்தில் காற்றும் மழையும் இல்லாமல் இருந்தாலும் அதைச் சுற்றிலுமுள்ள பகுதிகளில் வீசும் பேய்க் காற்றின் ஓலம் இங்குத் தெளிவாகக் கேட்கும். சூருவளியை விளைவிக்கும் காற்றுச் சுழல் சுமார் 50 மைலிலிருந்து 800 மைல் அளவுள்ளதாக இருக்கும். அதற்கு அப்பாலுள்ள பகுதிகளை இது அவ்வளவாகப் பாதிப்பதில்லை. கடல் நடுவே தோன்றும் இச் சுழல் மணிக்குச் சுமார் 15 மைல் வேகத்தில் முன்னேறும். இந்த வேகத்தில் அதன் மையம் பல இடங்களுக்கும் சென்று, சூருவளியின்போது தொடர்ச்சியாக நிகழும் வானிலை விளைவுகளைத் தோற்றுவிக்கும்.

சூறை தோன்றுவதற்கு இரண்டொரு நாட்களுக்கு முன்பிருந்தே அதன் அறிகுறிகளை வானில் காணலாம். கொடிகளையும் இறகுகளையும் போன்ற மென்மையான மேகங்கள் உயரத்தில் வானிற் காணப்படும். சந்திரனையும், சூரியனையும் சுற்றி பரிவேடங்கள் (Halos) தோன்றும். இனி வரவிருக்கும் கேட்டின் அபாய அறிவிப்புகள் இவை. இப்போது காற்றின்வேகம் குறைந்து இறுக்கம் அதிகரிக்கும். கடலில் கொந்தளிப்பு மிகுந்து பேரலைகள் தோன்றும். புயலை வரவேற்கும் முன்னேற்பாடுகள் இவை.

புயலின் மையம் சுமார் 500 மைல் தொலைவில் உள்ளபோது மேகங்களின் வடிவம் மாறும். முன்னைவிடக் கீழே அடுக்கு மேகங்களும் கார்மேகங்களும் இப்போது தோன்

## சம அழுத்த வரைகள்




முதல் நாள் இரண்டாம் நாள் மூன்றாம் நாள்

றும். அவ்வப்போது காற்று திடீரென வீசி நொடிப்பொழுதில் அடங்கும். உயரத்திலுள்ள மேகங்கள் வரவிருக்கும் ஆபத்தை அறிந்து அஞ்சி ஓடுவதுபோல் நாற்புறமும் சிதறி ஓடும். உயரத்திலுள்ள காற்றில் நிகழும் கலக்கத்திற்கு இம்மேகங்களின் தாறுமாறுன் இயக்கம் ஓர் அறிகுறியாகும். இப்போது காற்றின் அழுத்தம் முதலில் மெதுவாகவும் பின்னர் விரைவிலும் குறையத் தொடங்கும். கடலின் கொந்தளிப்பும், ஆரவாரமும் அதிகரிக்கும். காற்றின் அழுத்தம் குறையக் குறைய அது வீசும் வேகம் அதிகமாகும். புயலின் மையம் ஓரிடத்தை அடையச் சற்று முன்னர்தான் அதன் வேகம் மிக அதிகமாக இருக்கும். இப்போது அடைமழை பெய்யும். சில சமயங்களில் இடியும் மின்னலும் தோன்றுவதும் உண்டு.

புயலின் மையம் அவ்விடத்தை அடைந்தவுடன் வானிலை முற்றிலும் மாறிவிடும். இப்போது காற்றின்வேகம் திடீரெனக் குறைந்து அது நிச்சலனமாய் விடுவதும் உண்டு. உலகமே அழிந்துவிட்டதோ என்னுமாறு இருண்டிருக்கும் வானம் இப்போது நிர்மலமாய்விடும். புயலின் விஜயம் முடிவுற்றது என்ற நம்பிக்கை மக்களது உள்ளத்தில் எழத் தொடங்கும். ஆனால் காற்றின் அழுத்தம் மட்டும் இப்போது நீச நிலையை அடைந்து ஆபத்து முடிந்தபாடில்லை என்று எச்சரித்த வண்ணம் இருக்கும்!

மையம் அவ்விடத்தைக் கடந்து சென்றவுடன் வானம் மீண்டும் இருண்டுவிடும். காற்றின் வேகம் அதிகமாகும். இப்போது அது பழைய கடுமையுடன் எதிர்த்திசையிலிருந்து வீசத்தொடங்கும். அடைமழையும் துவங்கும். இதன் பின்னர் காற்றின் அழுத்தம் மெல்ல அதிகரிக்கும். இப்போது காற்றின் வலிமையும் குறையும். மழை பெய்து ஓயும். இருண்டிருந்த வானம் தெளிவாகி, அப்பகுதியில் விளைந்திருக்கும் கேட்டினை வாஞேர்க்குக் காட்டுவதே போல் மேகத்திரை நீங்கும். அன்னையின் ஆடலுக்கு மங்களம் பாடுவது போல் மாந்தரது அழுகுரல் எங்கெங்கும் கேட்கும்.

இதுதான் இயற்கையன்னை ஊழிக் கூத்தாடும் விவரம். இதைப்பற்றிய விஞ்ஞான அறிவு இன்னும் பூரணமாகத் தெளிவடையவில்லை. வானிலை நிலையங்களைப் பெருக்கியும், கடலில் வானிலை அளவுகளைச் செய்தும், புதுமுறைகளையும் ராடர் (Radar) போன்ற புதுக் கருவிகளையும் பயனுக்கியும் வருங்காலத்தில் நாம் இதைப்பற்றிய உண்மையை உணரலாம். உயரத்திலுள்ள காற்றின் இயக்கமே சூறைகளின் தோற்றத்தையும், தன்மையையும், இயக்கத்தையும் முடிவு செய்கிறது என ஊகிக்கிறர்கள். உயரங்களில் வானிலை அளவுகளைச் செய்யும் முறைகள் தற்காலத்தில் தோன்றி வளர்ந்துள்ளன. இத்தகைய வானிலை ஆராய்ச்சிகளால் புயலின் வருகையை ஒரு நெடு நாட்களுக்கு முன்பே அறிய வசதிகள் கிட்டலாம். ஆனல் இந்த வானிலை விளைவிற்கேற்ற சூழ்நிலையையே மாற்றியமைத்து, இதைத்தவிர்க்கும் ஆற்றலையும் மானிடன் பெறும் நாளும் வரும் என்று, நான் கூறத் தயாராக இல்லை! வருங்காலத்தில் சுழற்காற்றில் கேட்டைத் தவிர்ப்பது இருக்கட்டும். இப்போது சூறையினுல் அடிபட்ட மக்களுக்கு உதவ முன் வாருங்கள்.

---

# இந்த உபகண்டத்தில் நாலுபேரில் ஒருவர் மலேரியாவினால் பீடிக்கப்படுகிறார்கள்

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். எண்ணிக்கையில் சொல்லப் போனால் ஒவ்வொரு வருடமும் கிட்டத்தட்ட பத்துகோடி ஜனங்கள் மலேரியாவினால் வருந்துகிறார்கள்.

அலட்சியம் செய்யாதீர்கள்—மலேரியா ஜனங்களை பலஹீனப் படுத்தி, வீழ்த்தக்கூடிய ஓர் கொடிய நோய். அது ஆரோக்கியத்தையும், சக்தியையும் அழித்து, உற்சாகத்தையும் அறிவையும் மழுங்கச் செய்து விடுகிறது.

ஆதலால் தான் நீங்கள் இன்றே மலேரியாவிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ள 'பாலுட்ரின்' உட்கொள்ளும்படி நாங்கள் வற்புறுத்துகிறோம். 'பாலுட்ரின்' உட்கொள்ளுவதற்கு அபாயமற்றது, சுலபமானது, மலிவானது, மலேரியாவைத் தடுக்கத் தகுதியானது உங்களை காப்பாற்றிக் கொள்ளுவதற்கு சிறந்த வழி ஒரே அணா விலையுள்ள ஒரு 'பாலுட்ரீன்' மாத்திரையை பிரதிவாரமும் ஒரு முறை சாப்பிடுவதுதான். அளவுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒரு பொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள். மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரின்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவரார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரின்' மாத்திரைகள் சுத்தமான, தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஒரே அணா தான்.



# 'பாலுட்ரின்'

மலேரியாவை வீழ்த்துகிறது

## அளவுமுறை

**சிகிச்சைக்கு:** வயதானவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை. 6லிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை வீதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.

**பாதுகாப்பிற்கு:** மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனால் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.




எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனோ அல்லது பாலுடனோ உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.

KP 73




ஸன்லைட்
சோப்பினால் தான்

துணிகளை
அடித்துத் துவைக்காமலே
வெண்மையாகவும்
பிரகாசமாகவும்
சலவை செய்கிறது!




S. 200-50 TM




நண்பர் ஒருவரின் கல்யாணத்திற்காகப் புறப்பட்டோம். சரித்திர ஆசிரியர் பதவியிலிருக்கும் சந்தோஷ் அவர்களுடன் நான் போய்க் கொண்டிருந்தேன். சோழநாட்டு எல்லை தாண்டி விட்டது என்பதை மாவட்ட எல்லைப்பலகை சுட்டிக்காட்டியது. பஸ் இன்னும் அரைமணி நிற்கும் என்ற தகவல் அறிந்து அருகாக இருந்த காப்பிக்கடைக்குள் நாங்கள் நுழைய இருந்த சமயம், "சார் இந்தத் தண்ணீர் குடிப்பதைவிட, அதோ" என்று சுருங்கச்சொல்லி விளங்கவைத்தான் டிரைவர். பசிய தென்னஞ்சோலைகள் எங்களை 'வா வா' வென்று அழைத்தன. மரக்கூட்டங்களிலேயே தென்னை மரங்களின் அழகு தனி. அவை கவித்துவ தோற்றம் உடையவை. பசிய இலைகளுக்கு ஊடாக இருந்த குலைகுலையான செவ்விளநீர்க் காய்கள் எங்களைப் பார்த்துப் புன்முறுவல் செய்தன. காப்பிக்கடையை மறந்து நாங்கள் தோட்டத்து வேலியைத் தாண்டி அங்கு நுழைந்த சமயம், தாடிச் சாமியார், சொன்னார்:

"இந்தக் கதையை நீங்கள் கேட்டு இருக்கலாம். அத்தனை வியாபகமான கதை" என்று சொன்னதும் நான் திகைத்தேன். தாடிச் சாமியார்கள் கதை பல படித்திருக்கிறேன். அப்படி இவரும் ஒரு சரடு விடப்போகிறார், முடிவில் ஒரு அணா இரண்டணா பிடுங்கிக் கொள்ளுவார்.

"என்ன கதை?" யென்று தமது சரித்திர அறிவுக்கு ஏதேனும் உரைகல் கிடைக்குமாவென சந்தோஷ் கேட்டார். கதையைவிட, காலம், அரசாண்ட ராசாவின் பெயரில் நண்பர் சந்தோஷ் அவர்களுக்குக் குறி.

"நீங்கள், அதோ தெரிகிறதே, சிறிய மலைக் குன்று. அதை இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் பார்த்திருக்கமுடியாது."

''ஆம், சுவாமி பார்த்திருக்க முடியாது. தங்களைப் போன்ற சித்தர் முனிவரால் குளிகைகள் மூலம் பார்க்க முடியும்'' என்று சொல்லிக் கொண்டு தோட்டத்துக்குள் இறங்கினேன்.

''தோட்டத்து முனியன் வந்துகொண்டிருக்கிறான். உங்கள் பஸ் வந்து கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டுத்தான் அவன் சோம்பல் முறித்து, குடிசையிலிருந்து எழுவது வழக்கம். அவன் வருவதற்குள் அந்த விருத்தாந்தத்தை உங்களுக்கு நான் சொல்லலாமா?'' என்றவர் எங்கள் ஆமோதிப்பை எதிர்பாராமலேயே கதையை ஆரம்பித்தார், என் பார்வை மரத்திலே இருக்க, நண்பர் தமது பார்வையை எதிரே தெரிந்த குன்றுக்குள் பதித்தார்.

* * *

''அம்மா கதவைத் திறவுங்கள்'' என்று ஒரு உருவம் அந்தி மயங்கி வரும் வேளையில் கதவைத் தட்டவே, அந்தக் குரல் கேட்டுக் கதவைத் திறந்தாள் பாண்டிய நாட்டுப் படைவீரன் மனைவி. தன்னை 'அம்மா'வென்று அழைத்த அந்தக் குரலைச் செவிமடுத்த அவள்,

ஆவலோடு கதவைத் திறந்த போது, அவள் எதிர்பாராத வகையில் அருளம்பலம் கையிலே ரத்தம் சொட்டச் சொட்ட நின்றுகொண்டிருந் தான். அவன் வாய், பதற்றமில்லாமல், "என் நெஞ்சு இனி வேகும். என் தங்கையின் மானத் தைப் பறித்தானே அந்தச் சண்டாளன் தொலைந் தான்" என்று சொல்லவே, விஷயத்தைப் புரிந்து கொண்டாள். சோழ நாட்டிலிருந்த யாரையோ பழி வாங்க வந்திருந்த அவன் பழி வாங்கிவிட்டு அங்கே வந்து ஒளிந்து கொண்டான். அவனுக்கு அபயம் அளிக்க வேண்டியது அவள் கடமை. கையில் இருந்த உடைவாளைப் பிடுங்கி அடுப் பங்கரைப் பக்கம் போட்டாள். அவள் இவ்வாறு செய்து கொண்டிருக்கும் வேளையில் ஒருசில வீரர்கள் அங்கே குதிரையில் வரும் காலடி யோசை கேட்டது.

"இது தான் அவன் புகுந்த வீடாக இருக்கும்."

"புகுந்து போய், பாருங்கள். போங்கள்"

"அவன் இருப்பதைப் பார்த்துவிட வேண்டும்"

பேசிக்கொண்டே வீரர்கள், அங்கே வந்து இறங்கினார்கள். வருகின்றவர்கள் எதற்காக வந்து இறங்குகிறார்கள் என்பதை அறிந்தவள் 'உள் பக்கம் போய் ஒளிந்துக் கொள்' என்று அரு ளம்பலத்திற்குச் சொல்லிவிட்டு வாசற்பக்கம் வரவே, "அம்மணி தங்கள் குமாரன் வீரபாகு குத்தப்பட்டான். இவ்வழியே வந்தானா அந்தக் கொலைகாரன்?" என்று கேட்டான் வீரர்களுள் ஒருவன். தன் மகன் குத்தப்பட்டானா என்று அவள் கவலை கொள்ளாது உடனே, "யாரும் இந்தப் பக்கம் வரவில்லையே" என்று சொன் னாள். வீரர்கள் கொலையாளியைத் தேடி ஓடிக் கொண்டிருந்தார்கள். உள்ளே ஒளிந்திருந்த அந் தச்சோழ நாட்டு வீரன் திடுக்கிட்டான். தான் குத் திய நபர் அடைக்கலம் தந்தவளின் மகனா? அவன் சப்தநாடியும் ஒடுங்கிவிட்டன.

வீட்டுக்குள் வந்தவள் கண்ணில் துக்கத்திரை விழுந்ததாலும், மற்றும் பதற்றத்தாலும் "எங்கே இருக்கிறாய் தம்பி?" என்று கேட்டாள்.

அவன் குரலில் எத்தனை நடுக்கம்? "அம்மா" என்று வெளியே வந்தான் வரகுப் பள்ளத்து அருகாகப் பதுங்கியிருந்தவன்.

"வீரர்கள் என்னமோ சொல்கிறார்களே?"

"ஒன்றும் சொல்லவில்லை; நீ ஓடிவிடு."

"தங்கள் மைந்தன் வீரபாகு வந்ததும் என் நன்றியைத் தெரிவியுங்கள். அவன் ஒத்தாசையில் லாது போனால் என்னை இவர்கள் பிடித்துவிடு வார்கள். வஞ்சனை வென்றேன். சோழ நாடு போகிறேன்." என்று வாசலுக்கு வந்தான். வெளியே நின்ற குதிரையொன்றை அவிழ்த்துக் கொடுத்து, "வீரர்கள் உன்னை வடதிசைக்குத் தேடிப் போகிறார்கள். நீ தென்திசை வழியே சென்று, போய்விடு" என்று வழியனுப்பினாள். குதிரை மீது ஏறி உட்கார்ந்தவன், "அம்மா உங் கள் உதவிக்கு நன்றி. என் பணப்பை நான் குத்திவிட்டு ஓடிவந்த அவசரத்தில் எங்கோ விழுந்துவிட்டது. அதை எடுக்க அவகாசமில் லாமல் ஓடி வந்துவிட்டேன்." என்று தயங்கவே தான் அணிந்திருந்த தங்கச்சங்கிலியை கழற்றிக் கொடுத்து, "இதை எடுத்துச்செல்; பணமாக்கிக் கொள். இந்தப் பாண்டிய நாட்டு எல்லையைத் தாண்டுவதற்குப் பாடுபடு. இல்லையென்றால் உன் உயிர் போய்விடும்" என்று துரிதப்படுத்தினாள்.

குதிரையைத் தட்டிவிட்டான் அருளம்பலம். தன்னைக் காப்பாற்றிய தாயை வணங்கிக் கொண்டே மறைந்தான். அவன் மறைந்த பின் னர்தான் அவள் கண்களில் இதுவரை தேங்கி நின்ற பாசத்தின் துளிகள் பெருக்கெடுக்க ஆரம் பித்தன. எந்தக்காரியத்தை நினைத்து அவன் வந்தானோ அது நடக்கவில்லை. அதற்கு மாறாக துணை நின்ற தன் மகன் வீரபாகுவையே கண் மாறாட்டமாகக் குத்திவிட்டுச் சென்றுவிட்டான். ஆனாலும் அடைக்கலம் தந்த அவனைக் காட்டிக் கொடுக்க அவள் விரும்பவில்லை. கண்ணீரும் கம்பலையுமாகவிருந்த அவள் மனம் உயிரோடு இருக்கும் புத்திரன் பால் சென்றது.

ராஜ விசுவாசத்தோடு இருந்த புத்திரன் வீரபாகு இறந்துவிட்டான். ஆனால் ராஜத் துரோகியென்று பெயர் பெற்ற மூத்த குமாரன் வயிரவேல் சோழ நாட்டுப் படையிலே முக்கிய தலைமை வகிக்கிறான்! அவள் எண்ணம் உயிரோடு உள்ள அந்த வயிரவேலை நோக்கிப் பூரித்துப் போயிருந்த வேளையில் அரண்மனைச் சேவகன் வந்தான்.

"அம்மா தங்கள் மூத்த மகன் வயிரவேல்" என்று சொன்னதும் அவள் திடுக்கிட்டாள்.

"என்ன காரியம்? எங்கே என் மூத்த மகன்?" என்று பரபரப்பாகக் கேட்டாள். வந்த காவலன் சொன்னான்:

"நேற்று இரவு மாறு வேடத்தில் இங்குள்ள அரண்மனையில் உளவறிய வந்தாராம், தங்கள் குமாரர் வயிரவேல்."

"யார் அவனா?"

"தங்கள் குமாரர் வயிரவேல். நமது ராஜாவின் முக்கிய எதிரியல்லவா அவர்."

"அவன் கதியென்ன? என் கணவரல்லவா நேற்று அரண்மனையின் முக்கிய காவலாளி. அவர் பிடித்துவிட்டாரா?" அவள் ஆத்திரத்தோடு கேட்டாள்.

"ஆமாம் தந்தைதான், தனயனைப் பிடித்தார். ராஜத்துரோகி என்று முன்னமேயே பெயரெ

டுத்த தங்கள் மகனுக்கு இன்று பிடிபட்டதும் தண்டனை கொடுக்கப்பட்டது.''

"என்ன தண்டனை?''

"ராஜபக்தியுள்ள அவர் தம்பியின் கரத்தால் சிரச்சேதம்.''

"ஆ'' என்று கடும்விஷமுடைய பாம்பை மிதித்துவிட்டவள் போன்று அலறினாள். ஆனாலும் ஒரு திருப்தி. அவள் அழுகையைக் காணச் சகிக்காத அந்த வீரன் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். அவன் இன்னும் எப்படிச் சொல்வது என்று தன்னைத் திடப்படுத்திக்கொண்டு, "அம்மணி நான் என்ன சொல்வேன்? உங்கள் குமாரன் வீரபாகுவை அழைத்துவர எனக்கு உத்தரவு, அதற்காக வந்தேன். வரும்வழியில் இப்போது வந்தால்?''

"வந்தால்?" என்று தயங்கினாள்.

"இங்கே முந்திரித்தோப்பின் பக்கம் அவர் கொலையுண்டு கிடக்கிறார்."

மகனைப் பறிகொடுத்த தாய் இதைக்கேட்டுக் கதறவில்லை, கத்தவில்லை. வீரபாகு பற்றிய சேதியை அறிந்து கல்லாக்கிக்கொண்ட அதே இதயம் இன்னொரு மகனுக்கு உற்ற இடர்கேட்டுப் பாகாய் உருகிற்று. செத்துப் போன பையனை மறந்தாள். அவள் தாய்ப் பாசம், இதுநாள் வரை நாட்டின் துரோகியாய் இருந்த அவனைக் காப்பாற்ற எண்ணிற்று. ஆறு பெண்களோடு இப்போது வாழும் ஒரு மகன் பிழைக்கக்கூடாதா என ஏக்கம் கொண்டாள்.

"அம்மா தங்களுக்கு இந்தத் துயரம் மிகப் பெரிது" என்று கண்ணீர் சிந்தினான் காவலாளி.

"பிடிபட்ட வயிரவேல் எங்கே அடைபட்டுக் கிடக்கிறான்?"

"பொதுச் சிறையில் இருக்கிறார். தங்கள் கணவர் தான் பிரதம காவலாளி. அவர் தான் சிரச்சேதம் செய்யும் இடத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டுமென்று உத்தரவு. காரியத்தைச் செய்ய வேண்டியவர் தங்கள் இளைய குமா குமாரன்"

"இது கொடுமை"

"இது தான் ராஜ பக்தியைக் காட்டக் கூடியது. கடமை தவறாமல் யாராகவிருந்தாலும் நிறைவேற்றும் மனப்பக்குவம் ஏற்பட வேண்டும் என்பது தானே ராணுவ ஏற்பாடு."

"ஐயோ" என்றவள் அப்படியே சோகமாக விழுந்துவிட்டாள். வீரபாகுவைத் தேடி வந்தவன் அவன் கொலையுண்ட செய்தியைச் சேனைத் தலைவனுக்குச் சொல்லிவிட அங்கிருந்து மறைந்தான்.

* * *

அதோ பாருங்கள்; கம்பீரமாக நிற்கிறதே அந்தக் குன்றின் மேல்தான் அந்த நாளில் சிரச்சேதம் செய்விப்பது. பாருங்கள், சிறிது தயங்கித் தவறினாலும் செய்கிறவன் உள்பட, கீழேவிழ வேண்டி வரும். அத்தனை குத்துப் பாறை அது. இந்த வழியாகத் தான் சோழ நாட்டுக்கு அடிமையாகிவிட்ட தன் மகனைச் சேனாபதியின் உத்தரவின் பேரில் இழுத்துச் சென்றான் அகளங்கன். சேனாபதி சொல்லிவிட்டான். அந்தச் சிரச்சேதம் பார்க்கவோ, துணையாகவோ வேறு வீரர்கள் செல்ல வேண்டாமென்றும், தனக்கு அகளங்கன் ராஜ பக்தியில் மிகுந்த நம்பிக்கை உண்டென்றும் கட்டளையிட்டான். மகனை, தேசத் துரோகம் செய்தவனைக் கொல்ல இழுத்துச் சென்றான் அகளங்கன்.

இப்போது பார்க்கிற மாதிரி அந்நாளில் இங்கே மரங்கள் சோலைகள் இல்லை. கிட்டத் தட்ட பாழ்வனம்; காடு. எங்கும் மனித சஞ்சாரம் கிடையாது. இப்படிப்பட்ட இடத்தின் வழியே இழுத்து வருகிறான் அகளங்கன். சிரச்சேதம் செய்ய வேண்டியவன் தந்தை; அகப்பட்டவன் மகன். எப்படியிருக்குமோ?

"அப்பா" என்று அன்பு கனியச் சொன்னான் வயிரவேல். அவன் குரலில் ஆயிரம் மடங்கு அன்பு பிரவாகமாக ஓடிற்று.

இழுத்துச்சென்ற அகளங்கன் எதுவுமே பேச முடியவில்லை. மகன் என்ற பாசம் அவனை வாட்டும்; கடமை வரும்போது அது பம்பிக்கொள்ளும். தன் நாட்டைக் காட்டிக்கொடுத்து, தன்னலத்தை வளர்த்துக்கொண்டதோடு பிறந்த நாட்டுக்கே தீங்கு செய்ய மாறுவேடமிட்டு வந்தவன் மகனாக இருந்தால் என்ன, தந்தையாக இருந்தால் என்ன, என்றது உள்ளம். வரவர அன்பு இறுகி, இதயம் கல்லாகிக்கொண்டு வந்தது. வயிரவேலனின் காலிலும் கையிலும் விலங்கு பூட்டப்பட்ட காரணத்தால், அகளங்கன் சற்று நிம்மதியாக முன்னால் ஓட்டிக்கொண்டு போகமுடிந்தது.

"அப்பா உங்கள் இதயம் என்ன கல்லா? இதோ தெரிகிறதே இந்தப் பாறைகூட அதோ அந்த இளம் அரசங்கன்றுக்கு வேர்விட இடம் தருகிறது. கொடுமை நிறைந்த உங்கள் உள்ளம் மலையத்தனை பெரிதா? என்மீது அன்பில்லை? மூன்று நாழிகையாகப் பேசுகிறேன். ஒரு வார்த்தை 'மகனே' என்று அன்பு காட்டக்கூடாதா?'' என்று தந்திரமாகக் கெஞ்ச ஆரம்பித்தான்.

"நடந்துகொண்டே பேசு நிற்காதே''

தந்தை சொல்லிலே கடுமை இருந்தது; விஷம் தீண்டியதுபோல் உணர்ந்தான் மகன். ஆனாலும் சாகஸம்செய்து தப்பிக்கொள்ளலாம் என்ற நம்பிக்கையையல்லவா ஆபத்துக்காலத்தில் உள்ளவர்க

ளுக்குக் கடவுள் கொடுக்கிருர். அப்படித்தான் வயிரவேல் "அப்பா உங்கள் நெஞ்சம் கல். குழந்தையென்றும் புத்திர பாசம் என்றும் கேள்விப் படவில்லையா?" என்பதாகக் கல்லைக் கரைக்க ஆரம்பித்தான்.

"கேள்விப்பட்டதுண்டு. கடமை யென்பதை வீரன் கேள்விப்பட்டிருக்க வேண்டுமே."

"யுத்தவீரன் என்ருல் வாத்சல்யம்வற்றிச் செத்த உடலோடு இருக்கவேண்டுமா? குழந்தைக்குக் கொள்ளிவைக்கும் கொடிய தகப்பன் தாங்கள்" என்று உணர்ச்சியோடு விளையாடினுன்.

"நாடகமாடிப் பிறர் மனசை ஏமாற்றலாம். நம்மையே ஏமாற்ற முடியாது. தம்பீ, நீ என் பிள்ளையென்பதை மறந்தாய்; என் பெயருக்கு உலை வைத்தாய்; என் ஊதியம் குறைந்தது; பதவி தாழ்ந்தது. யாரால்? ராஜத்துரோகம் உள்ள பிள்ளையைப் பெற்றதால்?"

"புத்திரனைவிடப் பதவியும் பணமும் உயர்ந்தனவா? நல்ல வேதாந்தம்."

"கிறுத்து, படைவீரனுக்குத்தான் வேதாந்தம் என்பதை மாயக்கண்ணன் சொல்லவில்லையா, அர்ஜுனனுக்கு? மறந்துவிடாதே. உன்னுல் நான் படையில் கடையன் ஆனேன். என்னையும் ராஜ துரோகி எனப் பாண்டியன் நினைக்கிருன்."

"நான் ராஜத்துரோகி என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். என் வாழ்வு உயர்ந்துவிட்டது. சோழன் உயர்த்தினுன். சோழநாடு பெருமையடைகிறது."

"இன்று உயிரை வதைப்பதும் அதே சோழன் தானே. பேசாது நட."

தந்தையும் மகனும் வாதாடிக்கொண்டே மலையை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள். தகப்பனுருக்கு நெஞ்சைக் கல்லாக்கிக்கொண்டு கடமை செய்யவேண்டுமேயென்ற பயம் இருந்தது; பையனுக்கு எப்படியாவது பிள்ளைப் பாசத்தை உணர்ச்சியூட்டி,தப்பிக்கொள்ளலாம் என்ற நம்பிக்கைஇருந்தது. வந்தவர்கள் இருவரும் அதோ வளைந்து ஓடுகிறதே, அந்தக் காளுற்றங்கரையில் அமர்ந்தார்கள். அவர்கள் மௌனமாக இருக்கும் வேளையில் அவர்கள் நெஞ்சுக்குள்ளே எத்தனை துயரங்கள் புற்றுக்கொண்டனவோ, கரையானிலும் கடுமையாக அரித்திருக்கவேண்டும்.

"அப்பா, புத்திர வாஞ்சைதான் செத்துமடிந்துவிட்டது. நான் பால்யன். என் காதலியின் முகத்தை நான் பார்க்கவேண்டாமா? சென்ற மாதம் பிறந்த பாலகனை நான் காணவேண்டாமா? உலகத்திலிருந்து நான் மறையும் காலம் வந்தால் அவள் எப்படித் துடிப்பாள்? அந்தப் பாலகன் என்ன செய்வான்?" தன் கட்சியை வேறு கதியில் திருப்பினுன் வயிரவேல்.

"நட முன்னுல். உனக்கு விடிவு காலம் எதுவோ. என் கடமை உன்னைக் கொல்லுவது, நட" என்று ஈரமற்ற நெஞ்சோடு சொன்னுன்.

"இது என்ன மதியற்றவன்சொல்லும் சொல்?"

"இதுதான் விதி!"

"விதியா? மதியால் வெல்லலாம். என்னேடு சோழநாட்டுக்கு வா அப்பா. உனக்கும் எனது ஆறு சகோதரிகளுக்கும் நல்ல வசதிகள் செய்வேன். என்னை நம்பி விடு அப்பா" பரிதாபகரமாகப் பார்த்தான்.

"வீண் புலம்பல் தம்பி, நட. இன்னும் சிறிது பொழுது பூமியில் உன்னைக் காணப்போகிறேன். அவ்வளவுதானே?" இதுகாறும்அடக்கிக்கொண்ட தந்தையின் விழிகளில் நீர் ததும்பிற்று. தகப்பனுர் உண்மையில் அழுதாலும், "போதும் இந்த நீலிக் கண்ணீர். கடமையென்பதற்காக யாரையும் கொல்ல நாம் என்ன மிருகமா?" என்று சீறினுன். எப்படியாவது மனம் இளகி, கை விலங்கைத் தறிப்பான் தப்பிச் செல்லலாம் எனத் திட்டமிட்டான்.



"என்ன பேசினாலும் கடவுள் எனக்குக் கொடுமையான தண்டனை கொடுத்திருக்கிறார். என் கையால் என் பிள்ளையைக் கொல்வது எனக்குத்தான் தண்டனை, உனக்கல்ல. கடவுளே, நீ கொடியவன். கடமையே, நீ இன்னும் கொடிய பிசாசு" என்று சொன்னானே தவிர, கைதியை நிற்கவிடாமல் முன்னே பிடித்து இழுத்தான். கைதிக்கு, எங்கிருந்து அத்தனை வேகம் வந்ததோ தெரியவில்லை. விலங்கிட்டிருந்தும் 'அம்மா நீயா? இங்கே எப்படி வந்தாய்?'' என்று கண்ணீர் சோர அழுதான். எதிர் திக்கைப் பார்த்து.

பார்த்த அகளங்கன், "போ. இவன் நமக்கு வாங்கி வைத்த பரிசுகள் போதும்" என்று ஆட்டுக்குட்டியை இழுப்பவன் போன்று இழுத்தான்.

"அம்மா, இது நீதியா அம்மா?" என்று கத்தினான். குழந்தைப் பாசத்தில் கட்டுண்ட அவள் தயங்கினாள். அம்மா. அம்மாவென்ற கதறலே இந்தப் பிராந்தியம் எங்கணும் ஒலித்தது.

"அவள் உன் அம்மா அன்று; என் மனைவி. என்றைக்கு நீ சோழ நாட்டு வீரன் ஆனாயோ,



தலைவிரிகோலமாக இவன் தாய் அந்தக் காட்டுக்குள் ஓடி வந்துகொண்டிருந்தாள். திரும்பிப் பார்த்த அகளங்கன். "யார் உன் அம்மாவா?" என்றவன் அவள் அருகாகவந்ததும், "நீ எங்கே வந்தாய்?" என்று கேட்டான்.

விலங்கிட்டு நின்ற மகனை மார்பில் அணைத்துக் கொண்டு முத்தமிட்டாள்.

"ஐயோ இவனை விட்டுவிடுங்கள்" என்று சொன்னாள். எரித்துவிடும் முக்கண்ணனைப்போல்

அன்றே நீ எங்கள் பிள்ளையல்ல. எங்கள் பிள்ளை அவன் தான் வீரபாகு" என்று மேலும் நடந்தான்.

"இவனும் சாகவா?" என்று அழுதாள் தாய். நடந்துவிட்ட காரியங்களை, ஆள்மாறாட்டமாகச் சோழ நாட்டு வீரன் தங்கள் மகனைக் குத்திவிட்டதைச் சொன்னாள். மகன் இறந்தான் என்பதைக்கேட்ட அகளங்கன் துடித்தான். குழந்தையைப்போன்று விம்மி விம்மி அழுதான். தன்

தகப்பன் தம்பிக்காக அழுவதையும் தனக்காகக் கல்லாக இருப்பதையும்கண்டு உள்ளூரக் கோபங் கொண்டாலும் சந்தர்ப்பத்தைப் பயன் படுத்தித் தப்ப நினைத்து, "அப்பா, அழாதிர்கள். நடந்து விட்டது. நான் அந்தச் சோழநாட்டு வீரனைத் தேடிக் கொல்லுவேன். அருளம்பலம் தம்பியைக் கொன்ற காரணம்?" என்று தாயிடம் விசாரித்தான்.

அவள் நடைபெற்ற சம்பவங்களைச் சொல்லி ஆள் மாறாட்டமாகத் தன் நண்பனையே கொன்று விட்டதாகச் சொன்னாள். அந்த வீரன் குற்ற மற்றவன். தன் அபயத்திற்கு உள்ளானவன். தன்னால் காப்பாற்றிவிடப்பட்டவன் என்பதையும் சொன்னாள்.

"அவன் போய்விட்டானா?" என்று கலங்கிய கண்ணீரைத் துடைத்துக்கொண்டு கேட்ட அகளங்கன். "நீ போய்ச்சேர். நீ இங்கு வந்ததே தவறு" என்று மனைவிக்கு எச்சரிக்கை செய்தான். தந்தை தாயிடம் பேசி, போக்குக் காட்டும் வேளையைப் பயன்படுத்தி, நழுவ நினைத்தான் வயிரவேல்.

"நில் பதரே. நழுவ நினைத்தால் இதோ கையிலிருக்கும் வேல் உன் உடலைப் பதம் பார்க்கும். நீ கைதி. நான் காவலன்; அந்த எண்ணத்தோடு நின்றுவிடு. ஓடாதே." என்று எச்சரிக்கை செய்யவே நகர்ந்தவன் நின்றான்.

ஒரு கையால் கைதியைப் பிடித்துக்கொண்டு, "அந்தச் சோழதேசத்து வீரனைத் தப்பவிட்டுவிட்டாயே; உனக்குக் கொஞ்சமும் பாசம் இல்லையா? நம்பியவர்களையே மோசம் செய்த அயோக்கியன்," என்று வீரபாகுவின் பிரிவாற்றுமை தாங்காது சொன்னான்.

"நாம் அபயம் கொடுத்தோம். காலை நேரத்து இருளில் தன் நண்பனை விரோதியாக நினைத்துக் குத்திவிட்டான். தன் தவறு என்று அருளம்பலம் அறியான். அவன் குற்றமற்றவன்".

"சண்டாளி, என் முகத்தில் விழிக்காதே. இதைச் சொல்லவா வந்தாய்? என் நெஞ்சு பற்றி எரிகிறது. இங்கே யேன் வந்தாய்?"

"இரு கண்கள் இருந்தன, ஒன்று போய் விட்டது. இவனாவது உயிரோடு இருக்கட்டும். அதனால் தான் இங்கே வந்தேன்." என்றவள் கைதியின் விலங்குப்பக்கம் விரல்களை ஒட்டிவிட்டாள்.

"உனக்கு உயிரின் மேல் ஆசையிருந்தால் அருகாக நெருங்காதே. நல்ல பிள்ளையைப் பறிகொடுத்தாளாம். இவனுக்கு வழக்காட வந்து விட்டாள். போய்விடு." என்று எற்றித் தள்ளினான். அவள் பிரமாதமாகக் கெஞ்சினாள். காலைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டு பதியிடம் பிச்சை கேட்டாள். மைந்தனை உயிரோடு விடச்சொல்லி அழுதாள்.

"அப்பா" என்றான் மனம் இளகி நிற்கும் தந்தையைப் பார்த்து. உடனே தன்னையே சமாளித்த அகளங்கன், "துரோகி அந்த வார்த்தையைச் சொல்லாதே" என்று ஈட்டி போலச் சொன்னான்.

"பெற்ற பிள்ளையில் இவன் தான் உயிரோடு இருக்கிறான்" என்றவள் மன்னித்துவிடும்படி கெஞ்சினாள்.

"உயிர்ப் பிச்சை கொடுக்க நீ வாதாடிப் பயன் இல்லை. இவன் நம் நாட்டுத் துரோகி; மாதா பிதிர் துரோகி; இவன் சாகட்டும்."

"என் குழந்தையைப் பார்க்க வேண்டும் அப்பா:"

"நான் செவிடன். உன் வார்த்தைகள் என் செவியில் விழமாட்டா."

"என் இளம் மனைவி இருக்கிறாள். அருமை மகன். அவர்கள்மீதுள்ள அன்பினால்"

"நான் இறக்க நேர்ந்தால் தள்ளாத இந்தக் கிழவி, உனது தங்கைமார் ஆறுபேர் இவர்கள் அனுதாபம் உன் குடும்பத்தைவிடப் பெரியது. உனக்கு ஒரு பிள்ளை, உன் மனைவி பால்யம். காப்பாற்றுவாள். இவள் கிழவியடா. ஆகவே நான் உன்னைவிட அனுதாபத்துக்கு உரியவன்" என்று சிரித்தான். தந்தையின் கடமை அவனுக்கு உத்வேகத்தைத் தந்தது. தந்தையின் கையை பிடித்துத் தாய் வழக்காடிய சமயம் தன் கை விலங்கினால், ஓங்கி யடித்துவிட்டான்.

எதிர்பாராத இந்த அடியைத் தலையில் ஏற்றதும், அகளங்கன்மூர்ச்சையானான். விலங்கும் தெறித்து அவன் கையிலிருந்து எகிறி விழுந்தது. அடிபட்ட அகளங்கன் விழுந்தான்.

"அம்மா, உன் பாசந்தான் என்னைக் காப்பாற்றியது. நான் விடுதலை பெற்றேன்." என்று தன் நன்றியைச் சொன்னான். தாய் மைந்தன் விடுதலையை ரசிக்குமுன், அவள் கண்ணிலே அகளங்கன் மண்டையில் கொப்புளித்து வடியும் ரத்த வெள்ளம் தெரிந்தது. "ஹா, என்ன காரியம் செய்துவிட்டாய்? என் மாங்கல்யம் போய் விட்டதே. படுபாவி" என்று கணவனை மடியில் விட்டு இரத்தம் பெருகா வண்ணம் அமுக்கினாள். எதிர்பார்த்ததிற்கு மேலாக, காயம் அதிகமாகவே, வயிரவேல் வெலவெலத்துப் போய் நின்றான். அவனுக்கு இருந்த தைரியம் "மாங்கல்யம் மாங்கல்யம்" என்று தாய் கத்தியதும் போய் விட்டது.

"அம்மா என் கை நடுங்குகிறது. கால் விலங்கைத் தெறிந்துவிடு. என்னை மன்னித்துவிடு.

அம்மா" என்று சொல்லவே, தன் பிள்ளைகளில் அவன் உயிரோடு இருக்கட்டும் என்று அன்புக் கரத்தால் ரத்தத்தை அமுக்கிக்கொண்டு பதருது ஒரு கையால் கால் விலங்கைத் தெறித்துவிட்டாள். மகன் தப்பிக்கப்பெற்றது பற்றிய மகிழ்ச்சி. தான் விடுதலை பெற்றேன் என்று தப்பித்துச் செல்ல முயன்முன்.

"ஐயோ, உன்னைத் தப்பவிட்டதற்கு இவரைச் சிறையில் போடுவார்களோ, அல்லது உனக்குள்ள சிரச்சேதம்......அந்தத் தண்டனை இவருக்குக் கிடைக்குமோ?'' என்று தயங்கி அழுதாள். தாய் அழுவதைக் காணச் சகியாத அவன் மனசில் பாசம் ஏற்பட்டு. "அம்மா நான் எப்படியாவது உங்களைக் காப்பாற்றுகிறேன். கவலை வேண்டாம்" என்று தயங்கினுன்.

"நீ ஓடிவிடு. யாராவது ஒற்றர்கள் நிழலாகப் பின்தொடர்ந்து வருவார்கள். தப்பிச் செல். நிற்காதே ஓடு ஓடு'' என்று எச்சரிக்கைசெய்தாள். அவள் எச்சரிக்கை செய்த சமயம், அடிபட்ட அகளங்கன் சிறிது பிரக்ஞைபெற்றுவரவே, விழித்துப் பார்க்க விலங்கு தறிபட்ட நிலையில் மகன் ஓட யத்தனம் செய்கிறுன். பேயனைப்போல் எழுந்தவன். "எங்கே அவன்? என்னுடைய எமன் எங்கே? அதோ நிற்கிறுனு? விட்டுவிட்டால் வீரன் குலத்துவந்த வீரனு நான்? என் தலையில்ஏது இவ்வளவு ரத்தம்?'' தன்னைச் சமாளித்துக்கொண்டு வெறியன்போல் நின்முன். அகளங்கன் கண்கள் திரையிட்டன. திடமனசினுலும் கண் திரையைச் சமாளித்து நின்முன் அகளங்கன்.

தந்தைக்குத் தெம்பு வந்துவிட்டதை அறிந்து மெதுவாகப் புதருக்குள் பதுங்கியவன் ஓட ஆரம்பித்தான். "ஓஹோ, நீ தப்பிவிடமுடியுமா? இதோ பார்'' என்று ஈட்டியை எடுத்தான். அகளங்கன் குறி தவருது என்பதை அறிந்த தாய் தடுக்கமுயன்றும் கன வேகத்தில் போய்விட்டது.

"என் இரத்தம் இருக்கும்வரை நான் பாண்டிய மன்னனுக்குத் துரோகம் செய்யமாட்டேன். செத்தாயா?'' என்று சிரித்தான் தந்தை.

சற்றுத் தொலையில் "அம்மா என் விதி இதுவா?'' என்று புலம்பியவாறு வயிரவேல் சடலம் பூமியில் விழுந்தது.

பாசத்தின் குரல் கேட்டு மகன் அருகாகத் தாய் ஓடியபோது, அங்கே வேல் பாய்ந்த உடலிலிருந்து வெள்ளம்போல் குருதி ஓடிக்கொண்டிருப்பதைக் கண்டு கதறிஞள். ஒரேதினத்தில் இரு பிள்ளைகளைப் பறிகொடுத்த துக்கத்தின் வேகத்தில் பூமியில் விழுந்து இந்தக் கானகமே கரையும் படி அழுதாள்; அரற்றிஞள். ஆனுல், வயிரவேல் தந்தையின் வேல்பட்டு இறந்துபோனுன். புலம்பும் மனைவி அருகாக வந்தான். தள்ளாடிவந்து, நின்ற அகளங்கனைப் பார்த்து "உங்கள் கடமையே பெரிது; என் தாய்ப்பாசத்தால் தடுத்ததை மன்னித்துவிடுங்கள்'' என்று கணவனைக் கட்டிய போது, "பெண்ணே நீ கேட்டது உன் மாங்கல்யம்; இதோ இருக்கிறது, பெற்றுக்கொள்'' என்று சொல்லியவனுல் மேலே பேச முடியாமல், கீழே விழுந்தான். பின்னர் அகளங்கன் எழவேயில்லை. கடமைக்காக உயிரைவிட்ட தன் கணவனைக் கட்டிக்கொண்டு அவள் அழுதாள்...... அழுதுகொண்டேயிருந்தாள்.

அங்கே அந்த மலைக் குகைப்பக்கம்போனுல் இன்னும் அழுகுரல் கேட்கும்.

* * *

எங்கள் காதிலே அழுகுரல் கேட்கும் பிரமை உண்டாயிற்று. இளநீர் அருந்தச் சென்ற நாங்கள் அதை மறந்து அங்கிருந்த பஸ்ஸுக்கு வந்தோம். தொலைவில் அந்தக்குன்று தெரிந்தது. அதிலே இரண்டு உருவங்கள். ஒன்றின் கழுத்தை மற்ருென்று வெட்டுவதுபோன்ற பிரமை தட்டியது. பார்க்கவே பயந்து முகத்தைத் திருப்பிக்கொண்டோம். பஸ் ஓட ஓட, செம்மண் புழுதி இரத்தத் தூளாகப் பரவி, பிரமிப்புத் தந்தது.

சரித்திராசிரியர்கூட, காலவரையறை நூற்ருண்டு மறந்து, செங்கதிரோன் ரத்தம் பூசிய மாலைநேரத்துக் குன்றைப் பார்த்துக் கண்ணீர் உகுத்தார். கார் ஓடிக்கொண்டிருந்தது.



# வாழ்க்கை வாழ்வதற்கே

கிழையூர் **தி. சேஷாத்திரி**

அன்று இப்படித்தான் நண்பர்களும் நானும் பேசிக்கொண்டிருக்கும்போது வாழ்க்கையின் பயன், குறிக்கோள் இவற்றைப் பற்றிப் பேச்சு வளர்ந்துவிட்டது.

எதுசரி எதுதப்பு என்பதற்கு, சாஸ்திரம், பெரியவர்கள் எல்லாம் பிரமாணம் என்ருன் கோபு.

"அதெல்லாம் சரிதான், அப்பா! சமய சந்தர்ப்பம், சாக மறுக்கும் மனது, வேளைக்கு வேளை கிண்டும் வயிறு இவைகள் எல்லாம் உன் சாஸ்திரங்களைவிடப் பெரியவை" என்றேன் நான்.

சிலர் ஒருமாதிரி பேசினுர்கள். சிலர் வேறு மாதிரி பேசினுர்கள்.

நான் ஒரு உதாரணம் சொல்கிறேன். அதைக் கேட்டுவிட்டு முடிவுக்கு வாருங்கள் என்றேன் நான் கடைசியில்.

"கதையில்லையே?" என்ருன், நாராயணன்.

"கதையாய் இருந்தால்தான் என்ன? கேட்க சுவாரஸ்யமாயிருந்தால் சரி!" என்ருன் கோபு.

நான் சிரித்துவிட்டு, "கதை யில்லை; உண்மை தான். நம்பாவிட்டால் அந்த இடத்துக்குப் போய் இன்னமும் அந்தக் கடையையும் கடையை நடத்தும் தம்பதிகளையும் பார்க்கலாம்!" என்றேன்.

"சரி, வீண் பேச்சு எதற்கு? சொல் விஷயத்தைக் கேட்கலாம்" என்ருர்கள் நண்பர்கள்.

இந்தத்தடவை நான் கோயமுத்தூர் போனேன் அல்லவா?

"ஆமாம், உன் தமையனுரோ யாரோ அங்கே பக்கத்து ஊரில் உள்ள ஒரு மில்லில் பெரிய வேலையில் இருக்கிருர் என்று சொல்வாயே."

"ஆமாண்டா அதுதான் கவலை. விஷயத்தைச் சொல்ல விடமாட்டாய் போலிருக்கிறதே. உங்கள் தொழிலே அதுதாண்டா" என்று அலுத்துக் கொண்டான் கோவிந்தசாமி.

நான் தொடர்ந்தேன்:

கோயமுத்தூரிலிருந்து பாலக்காடு போகும் ரோடு நல்ல சிமெண்டு ரோடு. அந்த ரோட்டில் ஆருவது மைலில் அந்த ஊர் இருக்கிறது. அந்த ஊரிலிருந்து கோயமுத்தூர் பக்கமாகச் சுமார் மூன்று மைல் போனவுடன் ஒரு மண்ரோடு வந்து அதனுடன் சேருகிறது. அந்த இடம் நான் அங்கே இருக்கும்போதெல்லாம் பொட்டல் காடாய் இருந்தது. அங்கே இப்பொழுது ஒரு "ஹாலோ பிளாக்" கம்பெனி வந்துவிட்டது. ஆகவே அங்கே வீடுவாசல் எல்லாம் ஏற்பட்டு ஒரு சிறிய ஊர் ஆகிவிட்டது. அதுவரையில் அன்று மாலை நான் தனியாகவே நடந்து போனேன்.

"அந்த ஹாலோ பிளாக் கம்பெனி நடத்துகிறவன் வாழ்க்கையில் கொள்கை இல்லாமல் பெரிய பணக்காரனுகிவிட்டான் என்று சொல்ல வருகிருய் போலும்!" என்ருன் கதை கேட்பதில் பிரியமில்லாத கந்தசாமி. அவன் கலைமகள், காவேரி முதலியவைகளில் கட்டுரைகள் இருந்தால்தான் படிப்பான். அவனுக்குக் கட்டுக்கதைகளைவிடக் கருத்து நிறைந்த கட்டுரைகள்தான் தேவை.

"அவசரப்படாதே கேள்! இல்லாவிட்டால் காதை மூடிக்கொள்." என்று சொல்லிவிட்டுத் தொடர்ந்தேன்.

அங்கே நான் போய்ச் சேர்ந்தபோது மணி ஏழு இருக்கும், இனித் திரும்பவேண்டியதுதான் என்று நினைத்துத் திரும்பும் சமயம் அங்கே ஒரு கடையைப் பார்த்தேன். கடையில் நல்ல பச்சை நாடன் பழங்கள் தொங்கின. எனக்கு அந்த ஊர் பச்சை நாடன் பழங்கள் என்ருல் பிரியம். அதுவும் தோலுக்கும் பழத்துக்கும் இடையே உள்ள வெண்மையான உள்தோலைக் கொத்துக் கொத்தாய்ப் பிய்த்து எடுத்துச் சாப்பிடுவதென்ருல் மிகவும் ஆசை.

"சரி தான். அது ஒரு குழந்தை ஆசை."

"குழந்தை என்ன பெரியவர்கள் என்ன? கதையைச் சொல்லட்டும்......விடு."

உடனே நான் கடைக்குள் சென்றேன். அங்கே ஒரு ஆள் மலையாளி போலிருக்கிறது; பாதி நரைத்தும் பாதி கருமை நிறத்துடன் இருந்த நறுக்கு மீசையுடன் கையில் தங்கத்தாலோ அல்லது தங்க முலாம் பூசிய ஒரு உலோகத்தாலோ ஆன ஸ்டாராப்பில் கட்டிய ரிஸ்ட்வாட்சுடன் தென்பட்டான். வயது நாற்பது இருக்கும்.

நான் வாழைப்பழத்தைச் சுட்டி என்ன விலை? என்று கேட்டேன்.

அவன் தக்காளிப்பழத்தை நிறுத்துக் கொண்டே, ''அணுவுக்கு இரண்டு; எடுங்க வேண்டியதை!'' என்றான்.

நான் வழக்கம் போல் பேரம் பேசினேன்; இரண்டணுவுக்கு ஐந்து கொடுக்கக்கூடாதா? என்றேன்.

அவன் ''முக்காலணு, எட்டுக் காசு வித்தது அண்ணே. என்னமோ அரை அணுச் சொன்னேன்.'' என்றான்.

என்ன அப்பா நானும் இந்தப் பக்கத்தில் இருந்தவன் தான்...... என்றேன்,

இந்தச் சமயம் கடைக்குள்ளிருந்து ஏதோ சப்தம் கேட்கவே அவன் கழுத்தைத் திருப்பிக் கவனித்தான். நான் கண்களை உள்ளே செலுத்தினேன். பார்வை பெட்ரோமாக்ஸ் லைட் வெளிச்சத்தைத் தாண்டி அப்பால் செல்ல மறுத்த போதிலும் கண்கள் நிலை மாருமல் நின்றன.

''யார் சின்ன ஐயரா?'' என்ற குரல் உள்ளிருந்து வந்தது. நான் சற்று விழித்தேன்.

பிறகு உள்ளிருந்து 35 வயதுள்ள ஒரு பெண்மணி வந்தாள். நான் திடுக்கிட்டேன்.

குட்டையான பருத்த சரீரம்; காதில் வெள்ளைக் கல்லால் ஆன தோடுகள்; கைகளில்பவுன் வளை; ஒரு விரலில் சிகப்புக் கல் மோதிரம்; இடுப்பில் விலையுயர்ந்த நூல் புடவை. பஞ்சம் காணுமல் பருத்து மெருகிட்ட உடல் வனப்புக் கொண்ட அவள் இருபத்தைந்து வயதுக்கு மேல் இராது என்று சொல்லும்படி இருந்தாள்.

''என்ன சின்ன ஐயரு மறந்துட்டதா தங்கம்மாவை?'' என்று கேட்டாள் அவள் நான் விழித்த விழியைப் பார்த்து.

''தங்கம்மாவா? மறப்பேனு'' என்று சொன்ன நான் திருதிரு என்று விழித்தேன்.

புரிந்துகொண்ட அவள் பேச்சை மாற்றினுள்.

''சின்ன ஐயரு மட்டும்தான் வந்திருக்குதோ!''

''இல்லே, குழந்தை குட்டி எல்லாம் வந்திருக்கிறுர்கள்.''

''அப்ப, இன்னும் நாலு நாள் இருக்குமல்லவோ இங்கே!''

''ஆமாம், இன்னம் எட்டு நாள் இங்கே இருப்பேன்.''

''சரி, ஒருநாள் சாவகாசமாக வரட்டும்'' என்றுள். பிறகு அந்த ஆளைப் பார்த்து 'என்ன முழிச்சுக்கிட்டு நிக்கறே. அந்த ஐயரு கேக்கிற வண்ணம் வாழைப்பழம் கொடு......நீங்க பிச்சுக்குங்க சின்ன ஐயரு!'' என்று சொல்லிவிட்டு, திடீர் என்று உள்ளே போய்விட்டாள்.

நான் நான்கு வாழைப்பழங்களைக் கையில் எடுத்துக்கொண்டு திரும்பினேன்.

இதே தங்கம்மா பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் நாங்கள் இருந்த வீட்டிற்கு அடுத்த வீட்டில் இருந்தாள். அவள் புருஷனும் தொழிற்சாலையில் வேலை செய்துகொண்டிருந்தான். நான் அப்பொழுது சிறியவனுயிருந்தேன். வயது பதினெட்டு இருக்கும். கொஞ்சம் கருமை நிறமாயிருந்தாலும் இந்தத் தங்கம்மா ஒரு தனி அழகுடன் இருந்தாள். அப்பொழுது அவளுக்கு இருபத்திரண்டு வயது இருக்கும் ஆனாலும் யார் பார்த்தாலும் இவள் என்றும் பதினெட்டு வயதைக் கடவாள் போலிருக்கிறதே என்று அதிசயப்படுவது வழக்கம்.

புருஷனுக்கு மிகவும் கட்டுப்பட்டு அவனை எல்லா விதத்திலும் திருப்தி செய்துகொண்டு நிம்மதியாக வாழ்ந்து வந்தாள் தங்கம்மா. அந்தத் தம்பதிகளைப் பார்க்கும் போது என் தாயார் அதிசயப்படுவாள். அவளும் என் தாயாரிடம் நல்ல மரியாதையுடன் பழகி வந்தாள். எனக்கு நன்ருய் ஞாபகம் இருக்கிறது. நல்ல உத்தியோகத்திலிருந்த சில இளைஞர்கள்கூடத் தங்கம்மாவின் உடல், மனது இரண்டின் ஆரோக்கியத்தைப்பற்றி, தென் தேசத்தை விட்டே போகாதவன், வடநாட்டு இனிப்புப் பக்ஷணங்களைப்பற்றிக் கேள்விப்பட்டு, அதைப் பற்றிப் பேசுவதுபோல் என்னிடமே பேசியிருக்கிறுர்கள். அந்தத் தம்பதிகளிடையே ஒரு பெண்குழந்தையும் வளர்ந்து வந்தது. ஐந்து வயதான அந்தப் பெண் குழந்தையும் நல்ல அளவான அங்க அமைப்புகளுடன் பார்ப்பதற்கு, ஏன் எடுத்துக் கொள்ளக்கூட நன்ருயிருந்தது. நான் அடிக்கடி அதை எடுத்துக்கொள்வேன். அதனுடன் விளையாடுவேன்.

எப்படியோ எனக்கு அந்தக் குழந்தையுடனும் என்னிடம் அதன் தாய்க்கும் ஒரு பாசம் விழுந்து விட்டது. இரண்டும் ஒரே தரத்ததுதான்!

''சரி, உன்னைப் பற்றித்தான் நாங்கள் நன்ருய் அறிவோமே!'' என்றான் நாராயணன்.

நான் மேலே ஆரம்பித்தேன்.

ஒருநாள் நான் பள்ளிக்கூடம் சென்று திரும்பி வரும்போது தங்கம்மா என் தாயாருடன் பேசிக் கொண்டிருந்தாள். அவள் இரைந்த குரலையே நான் அதுவரை கேட்டதில்லை. அவள் கோபமாகவும், அழுதுகொண்டும் பேசிக்கொண்டிருந்தாள். என் தாயார் அவளை ஏதேதோ சொல்லி அமர்த்திக் கொண்டிருந்தாள்.

அவர்கள் பேச்சில் இந்தப்பாகம் எனக்கும் காதில் விழுந்தது.

"இல்லே பெரியம்மா, நான் இவருடன்கூட வரும்போதே சங்கரி வயத்தில் குழந்தை அம்மா. என்னை அவரிடம்இருந்து பிரித்துக்கொண்டு வந்துவிட்டு இப்பொழுது விரட்டுவது சரியா அம்மா!" என்று சொல்லிவிட்டு 'ஓ'வென்று அழுதாள்.

என் தாயார் என்னைக் கண்டதும், தங்கம்மாவிடம், "சரி இதையெல்லாம் வெளியில் சொல்லாதே; அதுதான் இரண்டுநாள் இருக்கச்சொல்லியிருக்கிறனே, பார். அதற்குள் ஏதாவது முடியுமா என்று! இரண்டுபேரும் தான் இருந்துவிட்டுப் போங்களேன்!" என்ருள்.

"அதுவும் முடியாதாம் அம்மா. அவள் வரும்போது நான் இங்கே இருக்கக்கூடாதாம். என் குழந்தையும் என்னுடனே போய்விட வேண்டுமாம்."

தாயார் மேலே பேச அனுமதிக்கவில்லை. தங்கம்மா எழுந்திருந்து போனுள். நான் என்ன தங்கம்மா அழுது? என்றேன். "என்ன சொல்றது சின்ன ஐயரே!" என்ருள். தாயார், நீ போ; என்று சொல்லவே நானும் சைக்கிளைத் தூக்கிக் கொண்டு வீட்டுக்கு உள்ளே வந்தேன். தங்கம்மாவும் தாங்கமுடியாத பளுவைச் சுமந்து கொண்டு உள்ளே போய்விட்டாள்.

நான் உள்ளே வந்ததும் "என்ன அம்மா விஷயம்!" என்றேன்.

தங்கம்மா புருஷன் தன் சொந்த மனைவியை வரவழைக்கிருன். இவளை விரட்டுகிருன்! என்ருள் சுருக்கமாக.

"அப்படியாஞல் இவள் அவனுடைய மனைவி இல்லையா?"

"இப்பொழுதுதான் தெரிகிறது இல்லை என்று."

"தெரிந்தா இவள் வந்தாள், அவனுக்கு மனைவி இருக்கிருள் என்று"

"யார் கண்டார்கள்? இந்தச் சங்கரிகூட அவனுடைய பெண் இல்லையாம்.........சரி போ, சட்டையைக் கழற்று; காபியைச் சாப்பிடு!" என்ருள்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. அன்று இரவு அடுத்த வீட்டில் அழுகைக் குரலும், சாவதானமாக அதட்டும் குரலும் கேட்டுக்கொண்டே இருந்தன. என்ன ஆண்கள்? என்று அவர்களுடைய கல் மனத்தைக் கோபிப்பேன் ஒரு தடவை; மீண்டும் பெண்கள் ஏன் அசடாயிருக்கவேண்டும்? என்று நொந்துகொள்வேன் ஒரு சமயம்.

எப்படியோ இரண்டு நாள் கழிந்தது. அன்று விடியற்காலையில் வெளியே வந்தபோது வேறு ஒரு பெண்மணி அடுத்த வீட்டு வாசலில் ஜலம் தெளித்துக்கொண்டிருந்தாள். உள்ளே ஒரு பையன் குரல் அழுதது. அதை வீட்டுக்காரன் செல்லமாய் அடக்கிக்கொண்டிருந்தான்.

"தங்கம்மா போய்விட்டாளா அம்மா?"

"நேற்று இரவே போய்விட்டாள்!"

எனக்குச் சொரக் என்றது. பாவம்! குழந்தையை வைத்துக் கொண்டு என்ன செய்வாள்?

அப்புறம் பத்து நாட்கள் கழித்துக் கேள்விப்பட்டேன். தங்கம்மா மானேஜரிடம் பிரியாது செய்திருந்தாள். மானேஜர் வெள்ளைக்காரன். காலனியில் பூராவும் அந்தக் கம்பெனி ஆட்களே குடியிருந்தபடியால் மானேஜர் ஒரு அரசன் போல் மதிக்கப்பட்டு வந்தான் என்ருலும் அவன் ஒருவரது குடும்ப சமாசாரத்திலும் தலையிட விரும்பவில்லை. இருந்தாலும் தங்கம்மா புருஷனைக் கூப்பிட்டு 'ஏதாவது பணமாவது கொடு' என்ருனும். அவனும் ஏதோ ஒரு நூறு ரூபாய் கொடுக்கப் போனுனும். தங்கம்மா அதை வாங்கி, அவனுடைய முகத்திலேயே எறிந்துவிட்டாளாம். அவனவன் வேலை தலைக்கு மேல் இருக்கும் போது பிறரைப்பற்றியே கேட்க யாருக்கு நேரம்? தங்கம்மாவைப்பற்றி மறந்துவிட்டேன். எனக்கும் படிப்பு முடிந்துவிட்டபடியால் நான் சொந்த ஊருக்குப் போய்விட்டேன்.

இரண்டு வருஷங்களுக்கொரு முறை போகிற வழக்கப்படி மறுபடியும் என் தமையன் வீட்டுக்கு லீவுக்குப் போனேன். எல்லாரையும் பற்றி விசாரித்தேன். தங்கம்மாவைப்பற்றி மட்டும் விசாரிக்கவில்லை. ஆனல் அன்று மத்தியானம் அவளே வந்தாள். ஒரு கூடையில் வாழைப்பழம், தக்காளிப்பழம், வெண்டைக்காய் முதலியவையுடன் வந்த அவள் நான் வாசலில் நிற்பதைப் பார்த்துவிட்டு. "சின்ன ஐயரு எப்பொழுது வந்தது?" என்று கேட்டுக்கொண்டே வந்தாள்.

நான் என் வழக்கப்படி இன்று காலையில் தான் வந்தேன் என்று சொல்லிவிட்டு, "நீ சௌக்கியமா?" என்று கேட்டேன்.

"சௌக்யந்தான்" சின்ன ஐயரே!" என்றவள் பத்து வாழைப்பழத்தை எடுத்து என்னிடம் கொடுத்துவிட்டு, ஐயருக்குத் தக்காளிப்பழம் பிடிக்குமில்லே! என்று ஒரு வீசை தக்காளிப் பழத்தையும் எடுத்துத் தந்தாள்.

நான், எதற்குத் தங்கம்மா, என்று சொல்லிவிட்டு, மகள்சௌகரியமாயிருக்குதா? என்றேன்.

"ஓ சௌகர்யமாயிருக்குது. அதை, "தான் வெண்டி"லே சேர்த்துட்டேன்,

"கிறிஸ்தவ மதத்துக்கா கொடுத்துவிட்டாய்?"

"ஆமாம், சின்ன ஐயரே! அதென்ன அப்படிக் கேக்கிறீங்க? உங்க ஹிந்துமதத்திலே இருந்தா அதுக்கும் எனக்கும் கிடைச்சதுதானே கிடைக்கும்?"

"இப்பொழுது அங்கே என்ன சௌகரியம் கிடைக்கிறது?"

"படிப்புச் சொல்லித்தர்ருங்க, சாப்பாடு துணிக்குப் பஞ்சம் இல்லே. எப்படியோ நல்லா ஆய் விடும்?"

நான் மேலே என்ன பேசுவது?

அவள் போனவுடன் என் மன்னி வந்தாள் உள்ளிருந்து, "தங்கம்மா சின்ன அய்யருக்குக் கொடுத்திருக்கிருள் பார்த்தாயா மன்னி" என்றேன்.

"அவள் கிடக்கிருள்!" என்றுள் மன்னி அசுவாரசியமாய்.

"ஏன் மன்னி உனக்கு அவளிடம் கோபம்?"

"பீடை, துணியை மாற்றுகிறப் போலே புருஷனை மாற்றிக்கொண்டேயிருக்கிருள்!" என்றுள். மன்னியின் கோபத்துக்குக் காரணம் தெளிவாய்த் தெரிந்தது.

* * *

அடுத்து மூன்று வருஷங்களுக்கு நான் என் தமையனுர் இருந்த இடத்துக்குப் போகவில்லே. மீண்டும் போனபோது நான் தங்கம்மாவைப் பற்றி விசாரித்தேன்.

"என்ன அக்கரையப்பா!" என்று சிரித்த மன்னி, பாவம் 'அவளேச் செம்மையாக உதைத்துவிட்டுப் போய்விட்டான் அவளுடைய ஆள்' என்றுள். உடனேயே, இயற்கையாக ஏற்பட்ட இரக்கத்தைத் துடைத்து, "பின் இந்தப் பிசாசுகளுக்கெல்லாம் என்ன கிடைக்கும்"? என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள்.

நான் யோசித்தேன். பாவம் அவள் நிலேயைப் பண்பாட்டின் காரணமாக ஏற்பட்ட ஒரு அடிமைத் தனத்தில் வளர்ந்த ஒரு பெண்ணே ஆணே எப்படி அறியக்கூடும்? கடவுள் பெண் வர்க்கத்தை ஏற்படுத்தி இப்படி முள்ளில்லாத பழமரமாக ஆக்கியிருக்கவேண்டாம்!

அந்தத் தடவை நான் தங்கம்மாவைப் பார்க்கவில்லே. அவள் புருஷன் அவளிடம் இருந்த பணத்தையும் எடுத்துக்கொண்டு ஓடி இரண்டு வருஷமாகிவிட்டது என்று தெரிந்துகொண்டேன்.

நான் ஊருக்கு வந்தும்கூட அடிக்கடி தங்கம்மா ஞாபகம் வரும்; மனதில் ஒரு கொக்கி போட்டு இழுக்கும். கஷ்டத்துடன் பிரயாசைபட்டு மறப்பேன்.

மீண்டும் நான்கு வருஷங்கள் கழித்துச் சென்ற நான் தங்கம்மாவை இந்த நிலேயில் பார்த்தவுடன் அதிசயித்ததற்குக் காரணம் வேறு வேண்டுமா?

"சரி மறுபடியும் போனுயா?" என்றுன் கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டே கலியாணசுந்தரம்.

"போனேன்"

"என்ன சொன்னுள்?"

எதைச் சொல்வது? அவள் தன்னுடைய முயற்சியாலேயே இந்தக் கடையை வைத்திருந்தாள். பெண்ணுக்கு நல்ல இடத்தில் கல்யாணம் ஆகியிருந்தது. "எல்லாம் சௌகரியம்தான் சின்ன ஐயரே! உங்களுக்கு எவ்வளவு குழந்தைகள்?" என்று கேட்டாள் அவள்.

நான் அதற்குப் பதில் சொல்லிவிட்டு, "நேற்று இருந்த ஆள் யார்?" என்றேன்.

"அது என் புருஷன்!"

நான் பரக்கப் பரக்க விழித்தேன்.

"என்ன சின்ன ஐயரு, அப்பஇருந்தது போல இருக்குதே!"

"இல்லே இந்தப் பசங்கதான்."

"சரிதான் ஐயரு. ஆம்பிள்ளே இல்லாமல் இருந்தாலும்தான் பயமாய் இருக்குது. அதுக்கு இது தேவலாமில்லெ! உடையவன்னு ஒருத்தன் இருந்தால், அவன் அடிச்சாலும் பரவாயில்லே. ஒருத்தன் இல்லாவிட்டால் எல்லாக் கழுதையும் அடிக்குது!"

எனக்கு, தங்கம்மாவுக்கு நடுவில் ஒரு முறை சிப்பாய் செய்த கொடுமையைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்த கதை ஞாபகம் வந்தது.

நான் சிரித்து மழுப்பினேன்.

"ஏன், மகள் வீட்டில் போய் இருக்கக் கூடாதோ?"

"இந்த வசதி வருமா? நம்மவூடு; நம்மவாசல், நம்ம புருசன், நம்ம கடை"

"புருசனும் கடை முதலிய பொருள்களில் ஒன்று போலும்"

"ஆம், அவள் அனுபவம் அதுதானே!"

சில சமயம் வாங்கின பசுமாடு உதைக்கிறது; நடத்தும் கடை நஷ்டம் தருகிறது. அதைப் போல்தான் அவளுக்குப் புருஷனும் என்றேன் நான்.

சரி நேரம் ஆகிறது என்று கிளம்பினார்கள் நண்பர்கள்.

''முடிவு?''

'முடிவு என்ன? மாரல் கீறல் என்பதெல்லாம் நேரடி வாழ்க்கை தெரியாதவன் ஆசைதான்' என்றான் ஒரு நண்பன்.

'சரி, அந்த முடிவுக்கு வந்தாயா? அதைத்தான் சொன்னான் அவன் முதலிலேயே!' என்றான், கந்தசாமி.

நான் சொன்னேன்; அது அல்ல என் கருத்து:; சாஸ்திரங்கள் சொல்வதைக் காப்பாற்றவேண்டுமானால் படித்தவர்கள் சமூகத்தைக் காக்கவேண்டும்; சமூகம் பிரிந்தவர்களை அலட்சியம் செய்வதும், படித்தவர்கள் சமூகத்தை உதறி எறிவதும் தப்பிதம். நம் சமூகம் நாசமாய்ப் போகிறதே! என்று அங்கலாய்த்தேன் நான்.

'சரிதாண்டா! கிளம்புடா. பனிவிழ ஆரம்பித்துவிட்டது' என்று அதட்டினான் டாக்டருக்குப் படித்துக்கொண்டிருந்த நடராஜன்.

நாங்கள் எழுந்திருந்து மணலை உதறிவிட்டு வீட்டை நோக்கி நடந்தோம்.



# புத்தக விமர்சனம்

## அணுவில் தாண்டவம்

**அண்ணுமலை**

**ஆர். கே. விசுவநாதன், எம். ஏ. எழுதியது.**

தருமபுர ஆதீனம் ஸ்ரீ-லஸ்ரீ சுப்பமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசார்ய சுவாமிகள் அவர்கள் ஆதரவில் வெளியிடப் பெற்றது.

விலை ரூ. 3—0—0

அணுவின் ஆற்றலை அனைவரும் அறிய விரும்புகிறார்கள். ஒவ்வொரு வழியில் ஒவ்வொருவர் சோதிக்கின்றனர். கனகனும் சோதித்தான். அவன் மகன் பிரஹ்லாதனும் சோதித்தான். "சாணினு முன்னோர்தன்மை யணுவினைச் சத கூறிட்ட கோணினுமுளன்" அவனை ஓர் கம்பத்தின் வழியே முன்னவன் காணக் காட்டினான் பிரஹ்லாதன். ஆனால் அது மெய்யுணர்வால், அருளால் ஆனது. இன்று விஞ்ஞானிகள் புலன்களால் உணர்ந்தும் உணர்த்தியும் வருகிறார்கள். அணுயுகத்தை ஆரம்பித்து வைத்திருக்கிறார்கள். அணுவைப் பிளந்தும் இணைத்தும், பிரபஞ்சத்தை ஆக்கவும் அழிக்கவும் ஆற்றல் பெறுகின்றனர், இவ்வணு சக்தியை ஆசிரியர் தமக்கே உரிய தெள்ளிய நடையில் கற்றவரும் மற்றவரும் உணரும் வண்ணம் இந்நூலின் வாயிலாக விளக்கியுள்ளார். அணுக்களும் மூலிகங்களும், மின்சாரம், ஒளி, அணுவில் ஆனந்த நடனம், அணுக்கருவில் அகோர தாண்டவம் என்னும் 5 பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு அணுவின் அந்தரங்க மர்மங்களை வெளிப்படுத்திவிட்டார். தாதுப் பொருள்களின் ஜாப்தா, குறியீடு அணுநிறை, பரிபாஷைச் சொற்கள் விவரம் விஞ்ஞானிகளின் படங்கள் எல்லாம் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

Father ராஜம் S. J. M. A. DSC. அவர்கள் மதிப்புரையும், ஸ்ரீ-லஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாசார்ய சுவாமிகளின் திருவுருவப் படமும் ஸ்ரீ நடராஜராடும் ஆனந்த தாண்டவமும் அட்டைப் படமும் மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளன.

## பெண் தெய்வம்

**பி. எம். கண்ணன் எழுதியது.**

விலை ரூ. 4—0—0

கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர், சென்னை.

1943ல் முதலில் பிரசுரமானது. இப்பொழுது மூன்றும் பதிப்பு வெளி வந்திருக்கிறது. இதிலிருந்தே இந்த நாவல் தமிழ் மக்கள் மனதைக் கவர்ந்திருக்கிறது என்பது விளங்கவில்லையா? சாதாரண நிகழ்ச்சிகளைப் பின்னிக் கோத்து ஓர் சிறந்த நாவலாக ஆக்கிவிட்டார், கதையில் வரும் ஒவ்வொரு பாத்திரமும் ஒரு தனிப்பட்ட நபராகவும் நம்மில் ஒருவராகவும் இருக்கக்கூடியவர், அவரவர் தனிப்பட்ட குணங்களை அவரவர் வாக்கிலேயே வளர்த்திருக்கிறார் ஆசிரியர். சந்தர்ப்பங்களே சிக்கல்களை விளைவிக்கின்றன. பிறகு சமம் செய்கின்றன தனியாக ஓர் சூழ்ச்சிக்காரப் பிரதி நாயகனைச் சிருஷ்டித்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஆசிரியருக்கு ஏற்படவில்லை.

## நல்ல பிசாசு

**ஆனை ஸ்ரீ குஞ்சிதபாதம் எழுதியது.**

விலை. ரூ. 2—8—0

கலைமகள் காரியாலயம்,

மயிலாப்பூர். சென்னை.

இதில் 12 கதைகள் ஒவ்வொன்றும் ஒருவிதம். ஒவ்வொன்றிலும் ஒரு ரஸம். ஒவ்வொன்றிலும் ஒரு பிரமிப்பு. எழுதியவர் நல்ல பண்பாடுடையவர். வேத கால முதல் நாளது வரையுள்ள மனோ தர்ம விகாஸத்தை அறிந்தவர். அதனால் காட்டையும் நாட்டையும், மண்ணையும் விண்ணையும் எளிதில் அளந்து தம் பேனாவுக்கு மசியாக அடக்கி விடுகிறார். 'நல்ல பிசாசு' என்கிற கதையைக் கதையென்று சொல்லுவதா? பிசாசு தத்துவ ஆராய்ச்சி என்று சொல்லுவதா? ஆவி உலகத்தில் ஆசிரியர் சஞ்சரிக்க விரும்புகிறார். கடைசி கதையான 'ரகசியக் கடிதம்' ஐரிஷ் பிசாசுக் கதைகளைப்போல மருட்சியும் ஆழமும் வாய்ந்திருக்கிறது.

## வெறும் கோயில்

**வி. ஸ. காண்டேகர் எழுதியது.** கா. ஸ்ரீ. ஸ்ரீ: மொழி பெயர்ப்பு. விலை 2—8—0. கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை,

இது மூன்றும் பதிப்பு. காண்டேகருடைய கதைத்திறனைப் பற்றியோ, கா. ஸ்ரீ. ஸ்ரீயின் தமிழாக்கத்தைப் பற்றியோ தமிழ்நாட்டுக்குப் புதிதாகச் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை. ஆனாலும் படிக்கப் படிக்க அலுக்காத இப் புத்தகம் எவ்வளவு தடவை பதிப்பித்தாலும் புதிது தான். கதை சுவாரஸ்யத்துடன் கதை சொல்

லும் முறை, புரட்சிகரமான முடிவுகள், சிந்தனையைத் தூண்டும் 'வெறும் கோயில், வழியில் கிடக்கும் விக்ரஹகம் இவைகளின் சவாலே ஒரு தனி ரகம். நம்மை மயக்குவதோடு நில்லாமல் நம்மை எழுந்து நின்று விடைகூறத் தட்டிவிடுகிறது.

## ராஜ சுந்தரி

*தி. நா. சுப்பிரமணியன்* எழுதியது, கலைமகள் காரியாலயம். விலை 0—12—0. சரித்திர நாடகம். சோழர் காலத்திய சம்பந்தத்தை ஆசிரியர் கவிக் கண்ணுடனும், கலைக் கண்ணுடனும் நோக்கி ஓர் காதல் நாடகத்தை உருவாக்கிவிட்டார். தமிழன்னைக்குத் தொண்டு செய்பவர்கள் இத்தகைய சரித்திர நிகழ்ச்சிகளைப் புதுப்பித்துக் காட்டி, ஆந்திரர்களும் மற்றவர்களும் தமிழ் நாட்டுடன் கொண்ட தொடர்பையும் கடனையும் அடிக்கடி நினைவுறுத்தவேண்டிய காலமிது. பழையாறை புனர்நிர்மாணம் செய்திருக்கிறார் நூலாசிரியர். கஜனி முஹமதின் படையைத் தடுத்து நிறுத்த, சோழர், சேனையும் உதவியிருக்கிறது. பாரதம் ஒரே தேசம் என்ற நினைவு அப்பொழுதும் இருந்திருக்கிறது. கங்கைகொண்ட சோழதேவர் தம் மருமகனை சாளுக்யனுடைய உதவியை ஏற்று விஜயவாடாவில் வெற்றிவிழாக் கொண்டாடிய வைபவமும் இந்நாடகத்தில் காட்டப்படுகிறது.

## சபாஷ் டாங்கே

எழுதியது திருப்பூர்
S.M. வின்ஸென்ட்

வெளியிடுவோர்.— "ஜனக்குரல்"

பதிப்பகம் மதுரை.

விலை அணு இரண்டு.

சென்னையில் ஆகஸ்ட்-15ல் நடந்த கம்யூனிஸ்ட் கட்சியின் ரஹஸ்ய போலிப் பீரோ குழு பலாத்காரத்தை மீண்டும் இந்தியாவில் ஆரம்பிக்கத் திட்டமிட்டது. ரண திவே-டாங்கேலடியின் மூலம் இது வெளியாகிறது. டாங்கே இந்த நாட்டில் பலாத்காரத்துக்கு மதிப்பில்லை என்றும் காந்தியமே வெல்லும் என்றும் உணர்ந்ததாகவும் ஆனால் ரண திவேயோ, 'ஹைதராபாத், வங்கம், மலபார், தெலிங்கானாவில் நமது தோழர்கள் செய்த துரோகத்தால் தான் நமது போராட்டங்கள் தோல்வி கண்டன" என்று வாதாடியதாகவும், எதுவாயினும் கோமின் பாரம் சொன்னதின் பேரில் தான் அப்போராட்டங்கள் நிறுத்தப்பட்டன என்றும் இச்சிறு நூலில் விளக்கப்பட்டிருப்பதுடன் மற்றொரு முக்யமான விஷயம் வற்புறுத்தப்படுகிறது. அதாவது அரசாங்கம் சகலமும் பார்த்துக்கொள்ளும் என்பது ஒரு ஜனநாயக நாட்டுக்குப் பொருந்தாது; மக்கள் விழிப்புடன் இருந்து காத்துக் கொள்ள வேண்டும்.

## பாபாஜி கீதை

*சா. அ. அ. ராமய்யா எம். ஏ.* எழுதியது.

விலை 0—6—0

கிடைக்குமிடம்:— ஆசிரியர்,

1-1 அருளானந்த முதலி தெரு
செந்தோம், மயிலாப்பூர், மதராஸ்-4

கிரியா பாபாஜி கீதா ரஹஸ்யம் எனும் முன்னுரையில் ஸ்ரீ வி. டி. நீலகண்டன் ஈசுவரனே பாபாஜி அதாவது குரு என்றும், மனிதன் ஒரு தெய்வீக உயிரென்றும் கடவுளது அருள் ஒளியிலே நமது அன்றாட நடவடிக்கைகளைக் கொண்டு செலுத்துவதிலேயே உண்மையான சுகமும், வாழ்க்கையின்பமும் அடங்கியுள்ளன என்றும் விளக்குகிறார். இந்நூலில் பிரஸ்தாபிக்கபடும் பாபாஜி என்பவர் நமது நாட்டில் மறைந்துபோன யோக முறையை மீண்டும் கண்டு பிடித்துத் தெளிவு படுத்தினார் என்றும் அவர் தமிழர் என்றும் அவர் கி. பி. 203ல் பரங்கிப் பேட்டையில் பிறந்து வங்காளத்தில் வளர்ந்து, பல ஆச்சர்யங்கள் புரிந்தும் அனேக ஆசார்யர்களுக்கு உபதேசித்தும் இன்றும் தெய்வீகக் குரலாக இருப்பதுடன் தக்கவர்கள் கண் முன் பிரத்யக்ஷமாவதாகவும் ஆசிரியர் வருஷமாதம் தேதியுடன் வர்ணிக்கிறார். அவரது உபதேசங்களும் அவர் சம்பந்தமான பல நூல்களும் இச்சிறு நூலில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

## ஜாதகம்

**(இது ஒரு ஆங்கில வாரப் பத்திரிகை)**

கிடைக்குமிடம்:—"ஜாதகம் ஆபீஸ்"

விலை 0—8—0

2, தம்பு செட்டித்தெரு, சென்னை-1

**ஆசிரியர் ஸ்ரீ K. பிரபாகரன்**

பல ரஸமான விஷயங்களுடன் வார பலனும் கேள்வியும் பதிலும், விலைவாசிகள் ஜோஸ்யமும், இருக்கின்றன. வார பலன்கள் மோஹம் உலக மக்களைப் பிடித்துக்கொண்டு ஆட்டும் இக்காலத்தில் தசா புத்திகளை மறந்து, ராசியை மட்டில் கொண்டு ஸூசிக்கப்படும் பல பலன்கள் அதிகஉபயோகமாகா என்று நாம் மட்டில் எச்சரித்து என்ன பயன்?

Edited & Published by N. R. Ramanujam & Printed by S. Rangaswami
at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.







TATA
AGRICO










